

# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

நவம்பர்

1981

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்
மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்
1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப்போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி
8-00 முதல் 12-00 (நடு இரவு) ஸர்வதரிசனம்
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.
மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன
இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் நடுஇரவு 12-00 வரை ஸர்வதரிசனம்.
12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : ஸர்வதரிசனம்
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 12-00 வரை : பூலங்கி ஸர்வதரிசனம்
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன
10-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன.
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.
8-00 முதல் இரவு 12-00 வரை ஸர்வதரிசனம்
12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (த(னி



बद्धेनाञ्जलिना नतेन शिरसा गात्रैस्सरोमोद्गमैः
कण्ठेन स्वरगद्गदेन नयनेनोद्गीर्णबाष्पाम्बुना ।
नित्यं त्वच्चरणारविन्दयुगलध्यानामृतास्वादिनाम्
अस्माकं सरसीरुहाक्ष सततं सम्पद्यतां जीवितम् ॥

*பத்தேநாஞ்ஜலிநா நதேந சிரஸா காத்ரைஸ் ஸரோமோத்கமை:*
*கண்டேந ஸ்வரகத்கதேந நயநேநோத்கீர்ண பாஷ்பாம்புநா,*
*நித்யம் த்வச்சரணாரவிந்த யுகள த்யாநாம்ருதாஸ்வாதிநாம்*
*அஸ்மாகம் ஸரஸீருஹாக்ஷ ஸததம் ஸம்பத்யதாம் ஜீவிதம்.*

தாமரைப் போன்ற திருக்கண்களையுடைய பெருமானே! சேர்க்கப்பட்ட அஞ்சலி முத்ரையாலும் வணங்கிய தலையினாலும், மயிர்க் கூச்செறிதலோடு கூடிய அவயவங்களினாலும் தழுதழுத்த ஸ்வரத்தோடு கூடிய கண்டத்தினாலும், சொரிகிற கண்ணீரையுடைய கண்களினாலும், எப்போதும் தேவரீருடைய இரு திருவடித் தாமரைகளைச் சிந்திப்பதாகிற அமுதத்தை அருந்துகின்ற அடியோங்களுக்கு ஜீவனமானது எக்காலத்திலும் குறையற்றிருக்க வேண்டும்.

ஸ்ரீ குலசேகராழ்வாரின் முகுந்த மாலை - 20.




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

# நவம்பர் 1981

மலர் 12

இதழ் 6




## உள்ளுறை

மதிப்புரை

# அன்னமய்யா-ஓர் அறிமுகம்

**அன்னமய்யா-ஓர் அறிமுகம்: பக்கங்கள்48: மலிவுப்பதிப்பு விலை 50 காசுகள். வெளியிடுவோர்: திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.**

கலியுகத்தின் கண்கண்ட தெய்வமாகவும், செடியாயவல்வினைகள் தீர்க்கும் திருமாலாயும் திகழும் திருவேங்கடனின் திருவருள்கொண்டு அவன் புகழ்பாடி விளங்கி வரும் நூல்கள் கணக்கிலடங்காதவை. பலமொழிகளில் அந்நூல்கள் சிறந்து விளங்குவதை அறிவாளிகளும் ஆராய்ச்சியாளர்களும் போற்றிப் பாராட்டி வருகின்றனர். காலவெள்ளத்தின் போக்கில் ஆங்காங்குத் தெய்வப் பிறவிகளாகத் தோன்றிய பக்தர்கள் பலர் தம் தம் நாவு பயன் பெற பல நூல்களை பலவிதமாக உருவாக்கித் தந்துள்ளனர். அன்னவர் திரளில் தெலுங்கு மொழியில் திருவேங்கடவன் மீது கவிபாடி அழியாப் பெரும் புகழ் படைத்தவர் அன்னமய்யா. இவர் தெலுங்குக் கவிகளில் தலையானவர். மிகச்சிறந்த தெய்வக் கவி என்றால் இது சிறிதேனும் மிகையாகாது. தெய்வத்திருவருள்பெற்ற அன்னமய்யா அவர்களை உலகிற்கு அறிமுகப்படுத்தித் திருமலை திருப்பதி தேவஸ்தானம் அயராது இடையறாது செய்து வரும் அரும்பெரும் தெய்வத் திருப்பணிகள் அநேகம். இந்த வரிசையில் தமிழ்த்தாய் செய்த நல் தவப்பயனால் தமிழ் நல்லுலகிற்குக் கிடைத்த அறிவுப் பெட்டகம் "அன்னமய்யா ஓர் அறிமுகம்" என்னுமிந்நூலாகும்.

திருமலையப்பனின் திருவிளையாடல்களையும் பெருமைகளையும் அன்னமய்யா தம்முடைய முப்பத்திரண்டாயிரம் கீர்த்தனைகளில் ஆனந்தமாகப் பாடி திருவேங்கடவனுடன் ஒன்று பட்டுவிட்டார். இவர் பாடிய கீர்த்தனைகள் தெலுங்கு மொழியிலும் வடமொழியிலுமானவை. இவை செப்பேடுகளில் பொறிக்கப்பட்டு தேவஸ்தானத்தாரால் காப்பாற்றப் பட்டுவருகின்றன. இவரைப் பற்றிய இந்நூல் சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டுள்ளது. இதனூடே இவருடைய வாழ்க்கைக் குறிப்பு, அன்னமய்யாவும் திருப்பதியும், இவருக்கும் ஆழ்வார்களுக்குமுள்ள ஒற்றுமை, இவர் தம் பாடல்களின் அருமை பெருமை என்னும் நான்கு தலைப்பின் கீழ் பேராசிரியர்களிருவர் ஒருமித்து தமிழன்பர்களுக்கு விளக்கிக் காட்டியிருப்பது தமிழுலகம் செய்த நல்தவப்பயனென்றே சொல்லவேண்டும்.

இந்நூலில் அன்னமய்யா தம் தெலுங்குக் கீர்த்தனைகளில் குறிப்பாக விளக்கியுள்ளவை எவை, மனதில் எப்போதும் குறிக்கப்படவேண்டியது எது, நெஞ்சத்தை அள்ளும் சொல் வளமும் பொருள் செறிவும் மிகுந்த பகுதிகள் எப்படியெல்லாம் காணக்கிடைக்கின்றன,அன்னமய்யாவின் பாடல்கள் எப்படியெல்லாம் ஆழ்வார்கள், வள்ளுவர், கம்பர், ஜயதேவர், புரந்தரதாஸர், மகாகவி பாரதியார் இப்படிப்பல கவிகளின் கவிதைகளோடு ஒற்றுமை பெற்று மிளிர்கின்றன என்பதைச் சீரிய முறையில் நன்கு விளக்கிக் காட்டியிருக்கின்றனர். அவைகளில் சில இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன.

"இவர் தம் இசைத்திறனைக் கண்டோர் இவரைத் தும்புருவோ, நாரதரோ மானிடவடிவம் பெற்று வந்த கந்தர்வரோ என்றிவரைப் பாடினர். அவைப் புலவர்கள் காதல் கற்பனையில் காளிதாஸரையும் வென்று விட்டார் அன்னமய்யா என்று பாராட்டிப் போற்றினர்-மாசில் வீணையும் மாலை மதியமும் என்று பாடிய அப்பர் சுவாமிகள் போல-ஆழ்வார்கள் உள்ளக்கிடக்கை அன்னமய்யா நெஞ்சில் நிலவியது-நாளொக்கொரு கீர்த்தனையாகப் பாடிய கீர்த்தனைகள் முப்பத்து ஈராயிரம்-புரந்தாஸர் பிரியா விடை கொண்டு தம்மூருக்கு எழுந்தருளினார். திருவேங்கடநாதனுக்கே தங்கள் புலமையெல்லாம் காணிக்கையாக வைத்து கவி பலபாடி காவியம் பல இயற்றிய குடும்பம் இவருடைய தன்றி வேறில்லை எனலாம்-இங்குத் தான் திருவேங்கடவன் கோயில் கொண்டு வேண்டுவோர்க்கு வேண்டும்

## ஆசிரியர்க்கு,

அன்புடையீர்,

அக்டோபர் மாதம் ஸப்தகிரி மாத இதழில் 21-ம் பக்கத்தில் 'காவிரிக் கரையில் மூன்று அரங்கங்கள்' என்ற கட்டுரையில், பக்கம் 22-ல் நான்காம் பாராவில், திருவரங்கம் அரங்கக்கரை பெருமாள் கோலத்தை "குடதிசை முடியை வைத்து... ..உலகத்தீரே" எனும் பாசுரம் குலசேகராழ்வார் பாடியதாகத் தவறாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அப்பாசுரம் தொண்டரடிப் பொடியாழ்வார் அவர்களால் (திருமாலை-19.) பாடப்பட்டுள்ளது. மேலும் அப்பாடலின் 'தென் திசை இலங்கை நோக்கி' எனும் அடியும் கட்டுரையில் விடப்பட்டுள்ளது.

இப்படிக்கு

டி. சி. ராஜ கோபால் - வாலாஜாபாத்.

(ஏற்பட்ட தவறுதலுக்கு வருந்துகிறோம் ஆ-ர்.)

வரஙகள் எல்லாம் வழங்குகிருன்- வேதாந்த உண்மைகளையெல்லாம் நம்மாழ்வார் தமிழில் தந்ததுபோல அன்னமய்யா வடமொழியிலும் தெலுங்கிலும் பாடி நிறைவு பெறுகிருர். இந்த நாவினைக் கொண்டு நாராயணனை மட்டுமே பாடுவேன்''. இப்படி பல வார்த்தைகள் படிப்போரின் நெஞ்சத்தை நீர்ப்பண்டமாக்குகின்றன. 17-18-19 பக்கங்களில் தெலுங்கு கீர்த்தனைகளைத் தமிழ் எழுத்திலும் அதன் பொருளைத் தெளிவாகவும் காட்டியிருப்பது, கொள்ளை மாளாவின்பத்தினைத் தருகின்றன. மேலும் பக்கம் 37-ல் ஹரி பக்தியே முக்கியம். பிற புறச் சடங்குகளினுல் ஒன்றும்கிட்டாது; தவமிருத்தல், துறவறம், வனவாசம், யோகம், மௌனம் இவையாவும் ஆண்டவன் பால் உண்மையான பக்தியின்றேல் பயனில்லை என்றெல்லாம் விளக்கும் அன்னமய்யா பாடலை சித்திரம்போல் காட்டியிருப்பது இந்நூலுக்கு உயிர் நாடி எனலாம். இறுதியில் ''திருவேங்கடத்தானைச் சரணடைந்தேன் அவன் காத்தான். இப்படி அருள் புரிபவர் யாரும் இந்த உலகத்தில் இல்லை' என்றும், குலசேகரப்பெருமாள் பாடிய பதிகத்துடன் ஒருமித்த கருத்துடைய பாடலும், பன்னிரண்டு இராசிகளையும், நவமணிகளையும், பத்து அவதாரங்களையும் அகப்பாடல் கொண்டு பாடியிருக்கும் கீர்த்தனைகளின் பொருள் விளக்கமும் சிந்தனையாளர்களை மெய்சிலிர்க்க வைக்கின்றன.

முடிவில் ''இனிதே முடிக'' என்கிற வாய்மொழிக்கிணங்க என்றுமெப்போதும் படிப்பவரின் உள்ளம் இனித்துக் கொண்டேயிருக்கும்படி முடிக்கப்பெற்று நிறைவுபெற்றது பொன் குடத்திற்குப் பொட்டிட்டது போலுள்ளது. கடைப்பகுதி கற்கண்டையும் விஞ்சிவிட்டது என்னலாம். இந்நூலில் தேவஸ்தானம் செய்யவேண்டிய நற்பணிகளில் 'அன்னமய்யா பாடல்களுக்கு விளக்கம் வெளி வரவேண்டும், ஆழ்வார்களனைவருடைய பாசுரங்களும்அன்னமய்யா கீர்த்தனைகளோடு ஒப்பிட்டு ஆய்தலுமொன்று' என்பன போன்ற தெய்வத்திருப்பணிகள் இன்றுமுள்ளன என்பதனை குறிப்பாலுணர்த்தியிருக்கிருர்கள். சிற்சில விடங்களில் அச்சுப் பிழையிருப்பினும் மறுபதிப்பில் இவை நீக்கப்படலாம். குறிப்பாகச் சொன்னுல் ஒவ்வொரு தமிழன்பர் கையிலும், வீட்டிலும், எல்லா நூலகங்களிலும் இந்நூல் இருக்கவேண்டியது இன்றியமையாததொன்று. திருவேங்கடவன் பிரசாதமான இலட்டோ, கற்கண்டோ, பச்சைக் கற்பூரமோ என்றுல் ஆமாம் எல்லா மாகுமென்று அனைவரும் இந் நூலைப் போற்றி உகப்பர் என்பதில் ஐயமேதுமில்லை. இந் நூலை உருவாக்கிய இருகண்மணிகள் போன்ற இருமொழி வல்லுனர்களான இருவர். தமிழ்த்துறையின் தலைவராக நின்று இமைப்பொழுதும் வீணுக்காது தமிழ்த் தொண்டாற்றி வரும் பொன் திரு. டாக்டர். சௌரிராஜன் அவர்களுக்கும், தெலுங்குத் துறையில் விரிவுரையாளராகவிளங்கி வருவதோடன்றி தெலுங்கு மொழியில் அன்னமய்யா கீர்த்தனைகளின் ஆழ் பொருள்களனைத்தையும் உன்னத முறையில் தெளிவாக்கி உதவிய திரு. டாக்டர். சர்வோத்தமன் அவர்களுக்கும் தமிழ் நன்னுடு எஞ்ஞான்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. குறைந்த விலையில் மலிவுப் பதிப்பாக வெளி வந்துள்ள இந்நூலை அனைவரும் அன்புடனும் ஆதரவுடனும் வாங்கிப் படித்து இன்புறுவதோடன்றி அன்னமய்யாவின் பாடல்களையும் பாடும் திறன்பெற்று அன்னமய்யா திருவருளுக்கும் திருவேங்கடவன் பேரருளுக்கும் பாத்திரமாகி பேரின்பம் பெற வேண்டி நிற்கிறேன்.

**கே. ஸ்ரீநிவாஸவரதன்,**
*திருப்பதி*



---

# என் வாழ்க்கையில்....

நான் 1967இல் D. M. E. டிப்ளமா பாஸ் செய்து ஒரு வருடம் வேலையின்றி இருந்தேன். பலவாறு முயன்றும் வேலை கிடைக்கவில்லை. பிறகு ஒரு நாள் என் சிற்றப்பா குடும்பத்தாருடன் திருமலைக்குச் சென்றேன். வழி யெங்கும் ஒரே மழையாக இருந்தது. மலையிலும் நல்ல மழை. எங்களுக்கு எங்குத் தங்குவது என்றே புரியவில்லை. எங்கள் அவதியைப் பார்த்து முன்பின் தெரியாத ஒருவர் எங்களுக்கு அவர் ஒருவரே தங்கியிருந்த காட்டேஜில் அன்று இரவு தங்க இடங்கொடுத்தார். பின்னர் அடுத்த நாள் காலை தரிசனத்திற்காக க்யூவில் நான்கு மணி நேரம் நின்று, இறைவனைத் தரிசித்தோம். வெளி வந்தவுடன், உட் பிரகாரத்தில் இலவச பிரஸாதம் கொடுத்துக் கொண்டிருந்தனர். நான் கை நீட்டிய சமயம் பிரஸாதம் தீர்ந்து விட்டது என்றனர் அங்கிருந்த அர்ச்சகர். என் மனம் கவலையடைந்தது. என்னையும் அறியாமல் என் வாய், ''நான் ஒரு அதிர்ஷ்ட கட்டை. இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பிரஸாதம் கிடைத்தால் வேலையாவது கிடைக்கும் என்றிருந்தேன். நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்'' என்று முணுமுணுத்தது. அதனைக் கேட்ட அவ்அர்ச்சகர் தெலுங்கில் 'என்ன தம்பி உன்னையே திட்டிக் கொள்கிருயே. இதோ இருக்கும் இதனையே பிரஸாதமாக எடுத்துக் கொள்'' என்று கூறி, சில பிரஸாத அன்னப் பருக்கைகளை திரட்டிக்கையில்கொடுத்தார். அருகு இருந்த ஒருவரும், 'ஊருக்குச் செல்' விரைவில் ஏழுமலையானின் அருள் உனக்கு நிச்சயம் கிடைக்கும்' என்று கூற, நானும் ஒரு நம்பிக்கையுடன் ஊர் திரும்பினேன். என்ன ஆச்சர்யம். அடுத்த நாள் என் படிப்புக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத வகையில், எல். ஐ. சி. யில் ஒரு வேலைக்காக நியமன உத்திரவு வந்தது. அன்றுதான் உணர்ந்தேன் வேங்கடவனின் திருவருளை. வளர்க அவன் அருட் பெருமை.

**ஆர். ஜெயகோபால்**
(Claims Dept LIC India)
**பெங்களூர்.**






# ★ சம்பத் சுக்ரவார விரதம் ★

முன்னுரை :

அம்பிகையின் ஆராதனையின்றி உலகம் இல்லை. உலக இயக்கம் நடத்தும் அன்னையவள் திருப்பாத வணக்கம் ஆதி காலந்தொட்டே இருந்து வந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. அதனால் மாதம் மும் மாரி பொழிந்தது. நாடு செழித்தது. நல்லாட்சி நடந்து மக்கள் நலமுடன் வாழ்ந்தார்கள். உத்தமர்களாலே பக்தி மேன்மையுற்றது. கொடைதானங்கள் பெருகி வளர்ந்தன. கடாக்ஷிக்கும் லக்ஷ்மி தேவி சுபிக்ஷம் தந்து பாக்யத்தை உண்டு பண்ணினாள். இது அக்காலப் புண்ணியப்புருஷர்களின் பெருமையாகும்.

தேவி பூஜையும், மஹிமையும், விரதங்களும், இவ்வகன்ற உலகத்தில் ஸகல ஜீவராசிகளையும் உய்விக்க வந்த வழியெனப் பெரியோர்கள் வைத்தனர். அவைகள் ஒவ்வொன்றிலும் விசேஷாதிகளை வைத்தார்கள். தத்துவம் பல கூறும் இதன் சரித்ரம் பாகவதம் முதலான புராணங்கள் விவரித்துக் கூறும். இதன் பலனை மக்கள் ஏற்றுக் கொள்ளவே இக் கட்டுரைத் தயாரித்தளிக்கப்பட்டிருக்கிறது. அபாரச் சக்தியினால் பக்தர்கள் அரும்பேறு பெற்று விளங்கினதாக சாஸ்த்ரம் கூறுகிறது. ஆதலால் மனிதருக்குப் பேருபகாரஞ் செய்யும் பிரசித்தியமான இப் பூஜை மற்றும் விரத மேற்பவர் புண்ணியராவர். இப்பூஜை செய்துவந்தமையால் என்ன பாக்யம் என்பதை பார்வதி பரமேஸ்வரனுக்கு சொன்னதாகக் கதை. ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு காரணத்தில் இஷ்டம். தெய்வம் ஒன்றுதான். அதன் லீலா வைபவமே அனைத்திற்கும் ஆதாரம் என்பதாம். தேவியருளால் முக்தியடைந்தவருண்டு.

பகவத் பக்தி என்பது நமக்கு வஜ்ரக் கவசம் போன்றது. அம்பிகையின் ஆராதனைப் போன்றச் சுவை எதிலுமில்லை. இதை நாம் சொல்லவில்லை. அருளாளர்கள் சொல்கிறார்கள். எல்லாவாற்றலும், எல்லா முதன்மையும், எல்லா அநுக்ரஹமும் உடைய ஜெகன் மாதாவை அறிந்தால் ஆனந்தம். மறந்தால் மனிதன். நிஷ்களங்கப் பக்தியுடையவர்கள் செய்யும் ஆத்ம நிவேதனத்தை அம்பிகை ஒரு நாளும் ஏற்காமல் இருக்கமாட்டாள். அன்பு மேலீட்டனாலேயே இவ் ஒளி அம்சம் பெற முடியும் என்பதாம்.

முருகனடி. எஸ். ஜெயராமன்,
சேலம்-1.

தயை புரியும் தேவி : ''அம்மா'' என அன்போடு அழைக்கும் பொருள் ஒன்றே இவளின் ஏற்றம் மற்றும் மகிமைக்கோர் உதாரணமாம். கருணை அன்னை என்று பக்தர்கள் மொழிவது இவளது தயாள குணம் பற்றியாகும். கோடி சூர்யப் பிரகாசம் போலான அம்பாளின் முகக் காந்தி அனைத்தையும் ஆட்கொள்ளும் என்பது தத்துவம். அவள்தான் அனைத்தையும் ஆட்டுபவள், தன் அருளால் இருளினை ஓட்டுபவள் என தேவி பராக்கிரமம் பேசப்படுகிறது. முன் ஜென்மத்துப் பயன் இவ்வுலகில் தேவி உபாஸனைக் கூறப்பட்டுள்ளது. முன்னோர்கள் கீர்த்தியடைந்த இத் தேவதா பூஜையை அவர்கள் வகுத்த வழியிலே காலங்களில் செய்து சுகம் பெற கூறப்பட்டுள்ளது. அதற்கு தயை புரியும் தேவியினுடைய அருளையே அறிந்து உள்ளபடி பிரார்த்திப்போமாக தேவியின் கிருபைக்கு ஆஸ்திகர்கள் பாத்திரமாகும்படிக்கு விரத பூஜை கூறுகிறது. அதனால் எத்தகைய குறையும் உண்டாகாது என்பதாம். பூஜை மற்றும் விரதங்களில் முக்யமானது தேவி உபாஸனை என ப்ரதானம் தரப்படுகிறது. வேத மந்த்ரங்களும் தேவியை உபச்சாரமாகப் பல முறை போற்றும். அத்தகையநான சுமங்கலி பூஜை எனப்படும் சம்பத் சுக்ர வாரத்தைப் பற்றி இங்குக் காணுவோமாக.

**விரதமும் - பூஜாக்கிரமமும் :**

பக்தி சிரத்தையுள்ள சுமங்கலிகள் அனுஷ்டிக்கும் விரதமிது. அதற்கென சிலக் குறிப்புகள் உள்ளன. அதன்படி செய்யலாம். இதை பக்தர்கள் நன்கு உபயோகித்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் நல்ல பலன் ஏற்படும்.

(1) தை, ஆடி வெள்ளிக் கிழமை மங்கள ஸ்நானஞ் செய்து இப் பூஜையை ஆரம்பிக்க வேண்டும்.

(2) புரோஹித பிராமணரை வைத்து சாஸ்த்ர ரீதியாக இதை நடத்திஞல் விசேஷம்.

(3) விநாயகர் பூஜைக்குப் பின் லக்ஷ்மி அஷ்டோத்ரம் படித்து, அக்ஷதை புஷ்பங்களாலே அர்ச்சிக்க வேண்டும்.

(4) குறைந்த பக்ஷ நைவேத்யம் பாயாஸம்.

(5) ஐந்து வருஷங்களுக்குக் குறைவில்லாமல் சுமங்கலிக்கட்கு தாம்பூலம் முதலானவைகள் தந்து வர வேண்டும்.

(6) கடைசியாகச் செய்யும் சமாப்தியன்று கதை வாசித்து இதை முடிப்பது ஸம்ப்ரதாயம்.

(7) பூஜாக் காலங்களில் இரு வேளையும் போஜனம் செய்யலாம்; பாதகமில்லை.

(8) பகல் பூஜைக்குப் பிறகு ராக் காலத்தில் லக்ஷ்மி ஸ்தோத்ரஞ் செய்து பாட்டுக்கள் பாடி ஆனந்தக் கற்பூர ஹாரத்தி எடுக்க வேண்டும்.

(9) கலசத்தில் அரிசி, பால், வெற்றிலை இவைகளை போட வேண்டும். பின்னர் ஆசாரத்தோடு கூடிய யதாஸ்தானத்தில் வைத்து விட்டு அதிலுள்ள பொருள்களை தன் குடும்பாதிகளுக்கு உபயோகித்துக் கொள்ளலாம். வருஷம் முழுதும் கலசத்தை மாற்ருமல் பூஜிக்க வேண்டும்.

(10) கடைசி வெள்ளியில் கதையில் சொல்லியிருக்கிறபடி நடத்த வேண்டும் என்பது நியதி. உத்தமம்.

**சம்பத் சுக்ரவார விரதத்தின் கதை:**

பார்வதிபுரம் என்ற ஒரு பட்டணம். சிவா - விஷ்ணு ஆலயங்கள் விளங்கும் செழிப்பான தேசம். அதனை குணபாலன் என்ற உத்தம அரசன் ஆண்டு வந்தான். சாந்தா தேதி என்ளெரு சத்யவதி அவனுக்கு மனைவியாக வாய்த்திருந்தாள். மக்களும் அரசன் எவ்வழியோ அவ் வழி குடிகள் என்பதைப் போல தர்மஸ்தர்களாக இருந்தார்கள். இவ்வளவிருந்தும் புத்திர பாக்யம் உண்டாகவில்லை ராஜாவுக்கு. இங்குதான் திருவிளையாடல் செய்தான் பகவான். பரமசிவன் பிக்ஷாண்டார் கோலங் கொண்டு அன்றுட அரண்மனை வருவார். ஆனால் பிக்ஷை ஏற்காமல் போய் விடுவார். இப்படி சில காலம் போனது. இதைக் கேள்விப்பட்ட

அரசி சாந்தாதேவி அரிசியுடன் ஒரு நாள் காத்திருந்து பிக்ஷையிட ஆயத்த மானாள். புத்திர பாக்யமில்லாத தால் பிக்ஷை வாங்க மறுத்த பரம சிவன் அநுக்ரஹிக்க எண்ணி புத்திரன் பிறக்க வழியும் சொல்லி மறைந்தார். 'பதிவிரதா தேவியாக இருந்தும் புத்திரன் இல்லாதது குறையே. பக்கத்தில் பஞ்ச மந்திர மென்னும் கிராம அரண்ணியம் இருக்கிறது. காடு வெட்டி நிலந் திருத்தி அதில் 5 கிரஹங்கள் கட்டி 5 பிராமணர்களை வாசஞ் செய்ய வைத்தால் புத்திரன் உண்டாவான்' எனச் சொல்லி அந்தர்யாமியானார். தம்பதிகளும் அவ்விதமே செய்து முடித்தார்கள். சிறிது காலம் சந்தோஷித்திருக்கும் காலத்து பார்வதியும் பரமேஸ்வரனும் கைலாஸத்திலிருந்து உலக சஞ்சாரம் புறப்பட்டு வரும்போது வழியில் கீழிறங்கி இந்த ப்ராமணர்கள் வஸிக்கும் பஞ்சமந்திர கிராமம் வரலானார்கள். ஆனால் பரமேஸ்வரன் ஒரு நிபந்தனை போட்டார் பார்வதிக்கு. அது என்ன? 'அங்கு நம்மை லக்ஷியம் செய்வார் யாருமில்லை. நீ மட்டும் போய் வா' என்று சொல்லி வெளியில் நிற்கலானார்.

முதல் வீட்டு வாசல்: அங்கு பார்வதி வந்தாள். 'சாணி தெளிக்க வேண்டும் எட்டிப் போ' என்றாள் அவ் வீட்டுக் குரியவளான கோள்மூட்டி குப்பம்மா. இதென்ன வீடு ஆகாதென அடுத்த வீடு பார்த்தாள் பார்வதி தேவியார்.

2-ம் வீட்டு வாசல்: அன்னம்மா என்ற பெண்மணி உள்ள அந்த வீட்டில் மாமியார்—மருமகள் சண்டை. இதுவும் தகாது என அடுத்த வீடு சென்றார்.

3-ம் வீடு: தெருச் சுற்றி ராமக்கா. அவள்தான் வீட்டு எஜமானி. சாம்பலைக் கூட வாராமல் சோம்பல் முறித்துக் கொண்டிருந்தாள். வெள்ளிக்கிழமையாயிருந்தும் வீடு வாசல் சுத்தம் பண்ணாமல், பேன் எடுத்துக்கொண்டு ஒரு கையில் பழைய சாதம் பிசைந்து பிள்ளைகளுக்கு போட்டுக்கொண்டு இருந்ததைப் பார்த்த பார்வதி மூதேவி வீடு என்று கூறி 4-ம் வீடு சென்றாள்.

4-ம் வீடு: எச்சம்மா. எருமைக் காது போன்று பெரியதாக இருக்கும் அவள் சரீரம். அங்கு வந்து நின்றாளாம் தேவி. அவ் வீட்டுக்காரி என்ன செய்தாளாம்? ஈயப் பாத்திரத்தில் பால் காய்ச்சிக் கொண்டு நெல்லை உரலில் இட்டு குத்திக் கொண்டிருந்தாளாம். அதுவும் அம்பிகைக்கு ஒத்து வரவில்லை.

5-ம் வீட்டு வாசல்: லக்ஷ்மி கரம். அந்த வீட்டுக்காரி அக்கம்மா எனப் படுபவள். அழகிய கோலமிட்டு வீடு வாசல் சுத்தம் பண்ணி, துளஸி விளக்கு ஏற்றி வைத்து தேவி ஸ்தோத்ரஞ்சொல்லி தன் மனக்குறை மற்றும் வறுமையை நீக்க வேண்டிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். பார்க்கவே லக்ஷ்மிகரமாக இருந்த அவ் வீட்டினுள் அம்மாடி என்று பார்வதி உள்ளே வந்து உட்கார்ந்தாள். அவ் ஏழை ஸ்திரீயும் ஆஸனமிட்டு 'அம்மா! தயையோடு இந்த ஏழை வீட்டுக்கு வந்தீர்களே' என்று உட்காரச் சொல்லி சந்தோஷித்தாள். அந்த ஸ்திரீ, முன் ஜென்மத்துப் பாபத்தினால் யாசகம் செய்து பிழைப்பதாகவும் கஷ்டப் படுவதாகவும் ஏழைகளாய் இருப்பதாகவும் விசனித்து வினயத்துடன் தன் வரலாற்றைச் கூறிப் புலம்பினாள். அதற்கு 'தேவி பூஜையை நீ அரைகுறையாகச் செய்து நிறுத்தி விட்டாய் அதனால் வந்த வினையிது. வருந்தாதே!' என்றுச் சொல்லி மேற்படி பூஜையான சம்பத் சுக்ரவார விரதத்தைப் பூர்த்தி பண்ணச் சொல்லி அதனால் வறுமை நீங்கும் விதத்தையும் கூறியருளினாள் பார்வதி.

**கதை கூறும் வரலாறு:**

முதல் வருஷம் புத்திரன் உண்டாவதற்கு பூர்ண கலசம். அதன் மேல் மஞ்சளில் அம்மனை ஆவாஹனை செய்ய வேண்டும்.

2-ம் வருஷம் சம்பத்து பெருகுவதற்கு சந்தனக் கல்லின் மேல் அம்மனை மஞ்சளில் ஆவாஹித்து பூஜை.

3-ம் வருஷம் பாக்யம் பெற பால் கலசம், அதன் மேல் தேவி ஆவாஹனம்.

4-ம் வருஷம் ஆயுள் விருத்தி. படி நிறைய அரிசி அதன் மேல் அம்மனை, சொல்லியப்படி பூஜை பண்ண வேணும்.

5-ம் வருஷம் மாங்கல்ய பலம் பெருக சுமங்கலி பூஜை. வெற்றிலை நூனி மேலோ, வாசற் படியிலோ, வெற்றிலைக்கட்டின் மேலோ அம்மனை வைத்து பூஜை செய்ய சுபம். சுமங்கலி ஸ்திரீகள் 5 பேரைச் சொல்லி சாப்பிட வைத்து சீப்பு, கண்ணாடி, புஷ்பம், மஞ்சள், சந்தனம், குங்குமம், தக்ஷிணை முதலான மரியாதைகள் செய்து தாம்பூலம் தந்து முறஜோடு ரவிக்கை, புடவை சக்திக்கேற்றபடி வைத்து இதைச் செய்து முடிப்பது வழக்கம். புண்ய சுமங்கலி ஸ்திரீகளின் பரிபூர்ண ஆசி பெற இதைக் காட்டிலும் மேலான பூஜை இல்லை.

பார்வதி தேவியார் அக்கம்மா எனப்படும் ஏழைக்கு எடுத்த வைத்த பூஜை என்பதால் ஏற்றமுடையது. இப்பூஜையின் பலன் என்ன? அதனால் வருவது என்ன? என்ற விஷயங்களை இனிக் கவனிப்போம்.

1. பிடி அரிசி கூட இல்லாத வீட்டில் நிறைய அரிசி வந்து குவியும்.

2. சமைக்கப் பானைகூட இல்லாத வீட்டில் குயவன் விலையில்லாமலேயே பானைகளை அடுக்கி விட்டுப் போய் விடுவான்.

3. அப்பானைகளில் அரிசியைப் போட்டு 'அக்ஷயம் அக்ஷயம்' என்றால் எள்ளளவும் குறையாதிருக்குமாம்.

4. பூஜைக்குப் பணமில்லை என்றால் என்ன? நல்ல மனம் உள்ளவர்களுக்கு

தயிர்க்காரி, நெய்க்காரி முதலான வர்கள் பணமில்லாமலே வெறுமனே ஊற்றிவிட்டு போய் விடுவார்கள் என்பது நம்பிக்கை.

5. சம்பத்தும் பாக்யமும் பெருகும். வியாதி போகும்.

**சம்பத் சுக்ரவாரமென்ற வெள்ளிக்கிழமைபூஜை பரவியது:**

அக்கம்மாள் என்ற பஞ்ச மந்திர கிராமத்திலிருக்கும் ஒரு ஸ்திரீக்கு சாக்ஷாத் பார்வதி தேவியே இப் பூஜையை எடுத்து வைத்ததாக வரலாறு. பின்னர் காலக்கிரமத்தில் அனைவர்க்கும் இதன் மகத்துவம் தெரிய வேண்டி அக்கம்மா தயிர்க்காரி ஒருத்திக்கு எடுத்து தர, தயிர்க்காரி ராணிக்குச் சொல்ல, ராணி பூலோகத்தார்க்கு இதன் பெருமையை மேற்கொண்டும் பறைச் சாற்றினள் என்பர். இந்தப்படிக்கு இந்த பூஜை ப்ரசித்யமானதாக நாடு நம்புகிறது. நாமும் மனச்சாந்தி பெற இச்சம்பத் சுக்ர வார பூஜை செய்து அதனால் நல்ல பலன் அடைந்து சுகம் பெற்று வாழ்வோமாக.

**அரிசி போடாமல் துரத்திய ராணி:**

ஒரு சமயம் அக்கம்மாள் என்ற பெண்ணின் பிள்ளைகளும், புருஷனும் பார்வதிபுர பட்டணத்துக்கு வயிற்றுப் பிழைப்புக்காக வேண்டி உபாதானம் வாங்கிக் கொண்டு வர அவ்வூர் அரசியிடம் சென்றார்கள். படி அரிசி கூட போடாமல் துரத்திவிட்டாள் அரசியார். பின்னர் அக்கம்மா அம்பிகையின் கடாக்ஷம் பெற்று சம்பத் சுக்ரவார பூஜை 5 வருஷம் வரை வெள்ளிக் கிழமை தோறும் செய்து முடிக்க, சகல சம்பத்தும் அவளை வந்து சேர்ந்தது. லக்ஷ்மி நித்ய வாஸம் பண்ண ஆரம்பித்தாள். இதைக் கேள்விப்பட்டு ராணி சொல்லி யனுப்ப, அக்கம்மாள் வர மறுத்தாள். சேவகர்கள் இதை ராணியிடம் போய்ச் சொல்ல ராணி பூஜைக்கு வேண்டிய திரவியங்களை யும் மற்றதையும் எடுத்துக்கொண்டு நேராக அக்கம்மாள் வீடு நோக்கி ஓடி வந்தாள். தன்னை மன்னிக்கும் படி வேண்டி பூஜையை எடுத்து வைக்கச் சொல்லி 5 வருஷம் வரை பூர்த்தி பண்ணி புத்திர பாக்கியம் முதலானவை யடைந்து குடி மக்களோடும், அரசனோடும் சந்தோஷித்திருந்து வெகு காலம் வாழ்ந்ததாகக் கதை. அரிசி போடாமல் துரத்திய ராணியை சரணாகதி யடையச் செய்த தத்துவமே இக்கதைப் பற்றியதான தனி ஒரு விளக்கமாம் என்றறிக.

**முடிவுரை:**

சம்பத் சுக்ரவார பூஜை என்னும் இவ்வெள்ளிக் கிழமை பூஜையை எல்லாரும் செய்வது என்பது யாவர்க்கும் எளிதன்று. இதன் தத்துவமும் விளக்கமும் இந்தக் கட்டுரையில் பார்த்தோம். திருவருட் குறிப்பு ஒன்றினாலேயே இது சாத்யப்படும். மற்றவர்க்கியலா. அனைவரும் அறிய வேண்டி இவ்வைபவம் பற்றி விஸ்தாரமாகக் குறிப்பிட்டிருக்கிறோம். இக்கதையால் சகோதரிகள் எல்லாரும் இவ்விரத மேற்று சுகம் பெற்று வாழ்வார்களாகுக. வறுமைகள் நீங்கவும், பாபங்கள் அகலவும் இச்ஜெகன் மாதாவின் பூஜையைக் காட்டிலும் மேலானதில்லை எனலாம். சுமங்கலிக்கன்றி மற்றையோர்க்கு இத்தகுதி கிடையாது. தினசரி வாழ்க்கையில் தெய்வ அருள் பலப்பல வடிவந்தாங்கி நிற்கும். ஆண்டவனுக்கும் நமக்கும் ஒரு நெருக்கம் ஏற்பட முதல்படி இவ்விரதங்கள் என்று வைத்தார்கள் நமது முன்னோர்கள். அதனாலே வைராக்யம் பல பெற்று, அருள் கைவரப்பெற்று, ஆத்ம ஞான மார்க்கத்திற்கு வழி சொன்னார்கள். இதுவே ஆண்டவனை அடையும் அஸ்திவாரக்கல். மனதை ஒரு நிலைக்கு கொண்டு வந்து, அதனால் இம்மை மறுமை நலன்களை எளிதில் பெற்று இன்புறுவார்களாக. அப்பெருமையை விளக்க வந்தக் கதையே இங்கு தொகுத்தளிக்கப் பட்டிருக்கிறது. அதுவும் நம் திருவருளே என்பது குறிப்பாம். பிள்ளை வரம் வேண்டுவோர் கவனித்துச் செய்யும் முக்யமான பூஜை இது என்பது பெரியோர் கருத்தாம்.

இம்மஹாலக்ஷ்மி பூஜை ஏற்றவர்கள் பாக்யவான்கள். புண்ணியமும், புனிதமும் சேர்க்கவரும் இவ்விரதத்திற்கு எதுவும் நிகரில்லை எனலாம்.

★

# பாவம்

ஒவ்வொருவனும் சாகும் சமயத்தில் பயப்படுவதாக நூல்களில் படித்து அறிகிறோம். சாவது நிச்சயம் என்பது ஒவ்வொருவனுக்கும் தெரிந்திருந்தும் அச்சம் கொள்வது என்ன காரணத்தால் என்று யோசிக்க வேண்டும். உலக பாசத்தினால் அந்தப் பயம் ஏற்படக் கூடுமோ என்று யோசித்தால் அது சரியான காரணம் என்று தோன்றவில்லை. ஏனென்றால் உயிருடனிருக்கும்போது ஒவ்வொருவனும் உலக விஷயங்களில் அகப்பட்டுக் கொண்டு அவஸ்தைப் படும் பல சமயங்களில் "தெரியாத்தனமாய் இந்தச் சிக்கலில் அகப்பட்டுக் கொண்டேன்" என்று பெருமூச்சுவிட்டுப் புலம்புகிறான். ஆகவே உலக பாசத்திலிருந்து விடுபடும் சமயத்தில் பயத்திற்குக் காரணம் பாசமாயிருக்க நியாயமில்லை. ஆனால் அச்சமயத்தில் ஒவ்வொருவனும் செய்த பாவம் அவனுக்கு ஞாபகத்திற்கு வருவதால் தருமராஜனுடைய நியாயஸ்தலத்தில் அடையவேண்டிய தண்டனைகளை உத்தேசித்துப் பயம் உண்டாகிறது என்று சொல்வது சரியான காரணம் என்று ஒப்புக் கொள்ளலாம். சாகும் தருவாயில் தைரியமாயிருக்க வேண்டுமானால் பாவம் செய்யாமலிருந்திருக்க வேண்டும். இவ்வுலகத்தை விட்டுப் பிரயாணம் செய்யும் காலத்தில் மனம் அசையாமலிருக்க வேண்டாமா? பாவம் செய்தவர்கள் நரகக் குழியில் தள்ளப்பட்டுத் தண்டனைகள் விதிக்கப் படுவார்கள் என்று சொல்லப்படுகிறது.

"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடிக் காரர் வலிகயிற்றால் கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தில்
மல்லாக் கத்தள்ளி மறித்து வைப்
பாரே."

—திருமூலர் 198, 199.

பாவம் என்றால் என்ன? பாவம் செய்யாதிருத்தல் நலம் என்று அறிந்தாலும் ஒவ்வொருவனும் அதைச் செய்து கொண்டேயிருக்கிறானே! ஒருவனுக்கும் பாவம் செய்ய வேண்டும் என்கிற இச்சையில்லை. இன்பத்தை அடைய வேண்டும் என்பதே அவன் நோக்கம். அப்படியிருந்தாலும் ஒவ்வொருவனும் செய்யும் காரியங்கள் பலவும் பாவமாகவே ஆகிறது. இதற்கு என்ன காரணம்? இந்த விஷயங்களை ஆராய்வது வீண் காலம் என்று தள்ளிவிடலாம் என்று உத்தேசித்தாலோ அதுவும் திருப்திகரமாய் இருப்பதில்லை. இது ஆச்சரியத்தை விளைவிப்பதோடு தர்ம சங்கடமாயுமிருக்கிறது.

பாவம் புண்ணியத்திற்கு விரோதமானது. பாவம் கெடுதலைச் செய்கிறது. பாவம் தருமத்திற்கு மாறுபட்டது. ஒவ்வொருவனுக்கும் பாவம் என்பது இன்னதுதான் என்று நன்றாய்த் தெரிகிறது. மனசாட்சி என்பது ஒவ்வொருவனிடத்திலும் இருக்கிறது. எதை அது பாவம் என்று தெரிவிக்கிறதோ அதுதான் பாவம். சுபாவத்தில் மனசாட்சிக்கு விரோதமாய்த் தோன்றுவதுதான்; அதாவது மனம் வேண்டாமென்று மறுப்பது தான் பாவம். மனச் சங்கடம் இல்லாமல் ஒன்றைச் செய்வது பாவமில்லை. ஒன்றையும் செய்யாமலிருப்பதோ சாத்தியமான காரியம் இல்லை.

திரு. ஜி. சுந்தரமய்யர்

"செய்வன திருந்தச் செய்; நுண்ணிய கருமமும் எண்ணித் துணி" என்கிற நீதிவாக்கியங்கள் இவ்விஷயத்திலுள்ள மர்மத்தைப் போக்கக்கூடியன வாயில்லை. செய்வதையோ அல்லது செய்ய வேண்டியதையோ ஆசையில்லாமல் ஒருவன் செய்தால் தோஷமேற்பட நியாயமில்லை. பாவம் என்பது ஏற்படாது. இதற்காக அல்லவோ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு நிஷ்காம கர்மத்தை உபதேசம் செய்தார். கருமத்தை ஆசைப்பட்டு செய்யக் கூடாது. கருமத்தின் பலனையும் ஈசனுக்கர்ப்பணம் செய்ய வேண்டும். இதுதான் பாவம் செய்யாதிருப்பதற்கு வழி. பாவத்திற்கு முக்கிய காரணம் ஆசை. காமம் என்று சொல்வதும் இதைத்தான்.

காமம் என்பவன் ஒரு விரோதி. அவன் விஷயத்தில் கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். ஒன்றை உத்தேசித்து ஒரு கருமத்தைச் செய்யும்போது நியாய வழியில் கிடைக்காவிட்டால் நியாயமில்லாத வழியில் உத்தேசித்ததை அடையப் பிரயத்தனம் செய்வதுதான் பாவம். அப்போதுதான் காமன் கையில் சிக்கிக்கொள்கிறோம். அப்போதும் கிடைக்காவிட்டால் கோபம் வருகிறது. இதுதான் குரோதம். இப்பேர்வழியினால் தூண்டப்பட்டு உத்தேசித்ததற்குத் தடையாயிருந்தவனுக்கோ அல்லது தடை செய்த வஸ்துவிற்கோ தீங்கு செய்யும் எண்ணம் தோன்றுகிறது. காமம் கோபமாய் முடிகிறது. காமத்தின் விளைவு குரோதம். இரண்டும் ஒரு வகையில் ஒன்றேயாகும். காமம் திரும்பிக் குதித்துப் பாய்வதே குரோதமாகும். இவைகள் இரண்டும் மனிதனுக்குக் கொடிய விரோதிகள். இவைகளை

அனுகாமலிருக்கவே மனிதனுக்குப் புத்தியை ஈசன் அளித்திருக்கிறர்.

நல்லதைச் செய்ய முடியாமற் போயினும் கெடுதலை செய்யாமலிருக்க வேண்டும். "ஈதல் அறம்; ஈவது விலக்கேல்." கொடுக்காவிட்டாலும் ஒருவன் கொடுப்பதைத் தடுக்காலிருக்கத்தான் கூடாதா? கொடையாளி நமக்கு நெருங்கிய நண்பனுயிருப்பான். தக்காருக்குத் தான் தருமம் செய்யவேண்டுமென்ற இதோபதேசத்தை நம்மையறியாமலே சொல்ல வேண்டி வந்து விடுகிறது. என்ன செய்கிறது? எல்லாம் சங்கடமாயிருக்கிறது.

ஏன் பாவத்தைச் செய்கிறோம்? காமம் முக்கிய காரணம் என்று காட்டியாய் விட்டது. பழைய வாசனையால் அதாவது பழக்கத்தால் பாவத்தைச் செய்யத் தூண்டப்படுகிறோம். தீமைகளைச் செய்வதில் இரண்டு கெடுதல்கள் ஏற்படுகின்றன. கெட்ட பழக்கமும் கெட்டவர்கள் சங்கமும் கூடாது. பொய் சொல்லுதல் தவறு என்று யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. சொன்ன பொய் ஒன்று; பிறகு அதை மெய்யாக்கப் பல பொய்கள். அவைகளும் தவறுகள் தானே. வேடிக்கைக்குக் கூடப் பொய்யுரைத்தல் கெடுதல். பாதகங்கள் யாவையென்பதைத் திருமூலர் தெளிவாய்க் காட்டியிருக்கிறர்.

"கொலையே களவு கட்காமம் பொய்
கூறல்
மலைவான பாதக மாமவை நீக்கித்
தலையார சிவனடி சார்ந்தின்பஞ்
சார்ந்தோர்க்கு
இலையாம் இவை ஞானனந்தத்
திருத்தலே"

எதைக் கொண்டு பாவம் செய்கிறோம்? மனம், வாக்கு, காயம் இவைகள் மனிதனுக்கு முக்கியமான உறுப்புகள். பணம் என்பது மற்ருெரு அனுகூலமான சாதனம். யோசித்துப் பார்த்தால் இந்த நான்கிலும் தான் பாவம் செய்கிறோம் என்ற முடிவிற்கு வரலாமெனத் தோன்றுகிறது. மனதால் கெடுதலை எண்ணியும், வாக்கால் கெட்ட வார்த்தைகளைச் சொல்லியும், தேகத்தால் கெட்ட காரியத்தைச் செய்தும் காலத்தைப் போக்குகிறோமே என்ற உணர்வு ஏற்பட வேண்டும். செல்வத்தை நல்வழியில் உபயோகப்படுத்தாமல் பாவகருமங்களில் செலவு செய்கிறோம். கெட்ட பழக்கத்தை விட்டுவிட்டு நல்ல பழக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். மேற்சொன்ன நான்கையும் நல்ல வழியில் திருப்ப வேண்டும்.

நல்ல வழி யாது? ஆன்ம லாபத்தைத் தரக் கூடிய கருமங்கள்தான் நல்ல வழி. இதுவே தருமம். இவ்வுலகத்திலும் மற்ற மற்ற எல்லாவிடங்களிலும் மதிக்கப்பட்டதும் மதிக்கக் கூடியதுமான பொருள் தருமம்தான். இறந்த பிறகு கூட வருவது ஒருவனுடைய நல்வினையும் தீவினையும்தான். தேகத்தை இவ்விடமே விட்டுப்போகிறோம். பணமும் கூட வருவதில்லை. கூடுவிட்டு ஆவிபோகும் இடத்தில் பணத்தைக் கொண்டு தப்புவதற்கு யாதொரு உபாயமும் செய்ய முடியாது.

பாவத்தைச் செய்யாதிருந்தால் இறக்கும் சமயத்திலும் கவலையில்லை. போனயிடத்திலும் பயமில்லை. நல்ல வழியில் வாழ்நாளை செலவழித்திருந்தால் சவுகரியங்களும் கிடைக்கும். இதற்குச் செய்யவேண்டியது என்ன?

மேலே சொன்ன நான்கையும் கொண்டு தருமத்தைச் செய்ய வேண்டும். அதர்மத்திற்கு விரோதமானது தருமம். ஒவ்வொருவனுக்கும் அவனுக்குரிய தருமங்கள் சாத்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. தருமங்கள் அனுதிகாலமாய் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளை அனுசரிப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஒருவன் தருமத்தைஏற்படுத்துவதோ அல்லது உண்டு பண்ணுவதோ சாத்தியமான காரியம் என்று தோன்றவில்லை. மகான்களாகிய சமய குரவர்களும் தருமத்தின் வழி நின்று உலகுக்குக் காட்டினர்களே யொழிய தருமத்தை ஏற்படுத்தியதாக அவர்கள் சொல்லவேயில்லை. தருமத்தை நிலை நிறுத்தினர்கள். தருமம் யாதெனத் தெளிவுபடுத்தினர்கள். இக்காலத்தில் எல்லாவற்றையும் தலைகீழாக்கி இது தான் தருமம் என்று இறுமாந்து கிடக்கும் பேரறிவாளர்களை ஒதுக்கி வைத்துவிடல் நலமெனத் தோன்றுகிறது.

எந்த இடத்திலும் எந்த சமயத்திலும் யாவருக்கும் உதவக் கூடியது

## படி ஸ்தோத்திரம்

நாம் ஆலயங்களுக்குச்செல்லும்போது இறைவனைத்தரிசித்து பின்னர் வரும்போது கோயிலில் உள்ள படியில் சற்று அமர்ந்து வரும் பழக்கத்தைக் கொண்டுள்ளோம். படி இல்லாவிட்டாலும் இறைவனைத்தரிசித்து பின்னர் கோவிலில் சிறிதுநேரம் அமர்ந்து வருவது வழக்கம். இவ்வாறு அமரும் போது சொல்லக் கூடிய ஸ்லோகம் ஒன்று உள்ளது. இதை நாம் சொன்னல் ஸகல பாக்கியங்களும் ஸம்பவிக்கும்.

முஹா பலி முகாஸ் ஸர்வே
ரீவாக் ஞாபரி பாலாகா
முயா ஸம்ப்ரார்திதா
பூயம் வர்த்தத்துவம் ஸிவஸந்தௌ.

*பழைய ஏடுகளிலிருந்து:*
பா. முத்துக்குமரன்-காட்டுக்கோட்டை.

ஈஸ்வர நாமம்தான். கீதையில் நாராயணன் நரனுக்குச் சொல்லி யிருப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. “பாபம் செய்து விட்ட தாகக் கிலேசப் படாதே; என்னை அடைக்கலம் புகுந்தால் நீ பயப்பட வேண்டியதில்லை” என்ற அருள் வாக்கை மறவாமலிருப்பது கடமை யாகும்.

தைரியத்தைக் கைவிடாமல் வாக்கால் ஈசன் நாமத்தைச் சொல்ல வேண்டும். நாணமில்லாமல் பல மாய்ச் சொல்லலாம். தன்னை யறி யாமல் தானே ஒருவன் விருத்தியாய்க் கொண்டிருப்பதை உணரலாம்.

மனதால் ஈசனைத் தியானம் செய்ய லாம். மனது நிம்மதி அடையும். அசைவற்று மனமானது நல்வழியிற் செல்லும்.

தேகத்தை ஈஸ்வர சன்னிதானத்தில் கட்டைபோல் நிற்கப் பழக்க வேண்டும். தேவ சன்னிதியில் பணியும் வழக்கம் நன்மையைச் செய்யும். இதற்கு சங்கோஜப்பட்டால் அகம் பாவம் விடவில்லை என்பதைத்தான் நிரூபிக்கிறது. இறுமாப்பு ஒழிய வேண்டுமானல் தண்டம் சமர்ப்பிப் பதை முதல் காரியமாக்கிக் கொள்ள வேண்டும்.

பணத்தாலும் தருமம் செய்ய எத் தனிக்க வேண்டும். எளியவனும் தருமம் செய்யலாம். ஒரு பைசாகூட கொடுப்பது முடியாத காரியம் என்று ஒருவன் சொன்னல் அதை நம்ப முடியுமா? பைசாகூட இல்லாமல் தவிக்கும் காலம் ஒருவனுக்கேற்பட லாம். உள்ளபோது பைசாகூட கொடுக்க இஷ்டமில்லாமலிருக்கும் புத்திசாலிகளையும் நாம் காண்கிறோ மல்லவா! நற்கரியங்களுக்குக் கொடுத் தல் ஒரு நல்ல காரியம், இளமையிலே இப்பழக்க மேற்பட்டு விட்டால் அதனாலாகும் நன்மைகள் பல.

இம்மாதிரி மேலே காட்டியபடி நான்கையும் நல்ல வழியில் பழக்கி விடின் பெறும் பேறுகள் பலவாம். பயம் என்பது ஓடி ஒளியும். பாபத் தைச் செய்ய மனம் எத்தனிக்காது. பிறகு கவலையே யில்லை. தரும வழி யில் செல்லப் பயிற்சி ஏற்படும். தரு மத்தை மறவாமல் சித்தம் நாடும். இயற்றும் கருமங்களெல்லாம் நன்மை யையே தரும். பேர், புகழ், கீர்த்தி இவைகள் எல்லாம் அவனிடத்தில் குடிகொள்ளும். பிறகு அவனைவிட பாக்கியவானுக வேறு யாரைச் சொல்லுவது?

அவனே உலகத்தாருக்கு விளக் கைப் போலாகிறன். பாவமில்லாத வன், களங்கமற்றவன் உலக உபகாரி யல்லவா? அவனே நல்லவன், “நல் லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை” என்கிற சத்திய மொழியின் உன்னதத்தை உணராமலிருக்க முடி யுமா? பாப மற்றவன் புண்ணிய வானல்லவோ? ஆசையில்லாமல் கருமத்தைச் செய்ய வேண் டும். எல்லாம் இறைவன் செயல் என்று நம்பி நம் கடமையைச் செய் தல் நலம். அவனன்றி அணுவும் அசையாது. கடமைகளைச் செய்யப் பிரயத்தனம் செய்ய வேண்டியதைத் தவிர பலனை எதிர்பார்த்தபடி காண முடியவே முடியாது. மனுஷ்ய கருமம் இன்னதென்று தெரிந்து கொண்டு அதன்படி நடக்க வேண்டியதே யொழிய மற்று என்ன செய்யப் பிர யத்தனப்படுவது?

பாவத்தின் பலன் கஷ்டம். கஷ்டப் பட ஒருவனும் விரும்ப மாட்டான். பாவத்தைச் செய்யத் தூண்டுவது காமம். காமத்தை வெல்வது கடி னம் தான். நல்வழியில் திரிகரணத் தையும் பணத்தையும் திருப்பி விட் டால் காமன் என்கிற கொடிய சத் துரு இருக்கயிடமின்றி அலறி ஓடி விடுவான். நெருப்பில் கட்டைகளைப் போடப்போடப் நெருப்புப் பரவுமே யொழிய அணையாது. நெருப்பைப் போன்றது காமம். ஆசைக்கு அளவே கிடையாது;முடிவுமில்லை.ஆசையைத் திருப்திபடச் செய்ய முடியாது. ஆசையை முற்றிலும் ஒழிக்கவும் முடியாது. ஆகவே ஆசையை நல்ல தனமாய் நல்ல வழியில் திருப்ப வேண்டும். உலகத்தையே அடைந்து விட்டாலும் மற்றென்றை அடைய ஆசை தூண்டும். ஆகையால் ஆசையை விடயங்களில் விடுவது தவ றன மார்க்கம். ஹிருதயம் பகவா னுக்குரிய இடம்; அந்த இடத்தைப் பரிசுத்தமாய் வைக்க வேண்டும். ஆத்மாவில் பகவான் உறைகின்றர். அவரைக் காண ஆசையை வளர்க்க வேண்டும். அவரை அடைய ஆசை யைத் தூண்டவேண்டும். இந்த ருசி யைக் கண்டு விட்டால் ஆசை வேறொன்றிலும் நாடாது. மனம் பூரித்து நிலையிலமரும். இந்த ருசி தெவிட்டாது. கரையாத கற்கண்டு போல் அழியாத நற்சுவையைக் கொடுக்கும். காமனுக்கு இதைவிட்டு வேறிடம் நகரவும் தோன்றுது. ஆத்ம சுகத்தில் மனம் லயித்துவிட்டால் மனிதன் அடைய வேண்டிய பேற்றை அடைந்தவனுவான். பட்டினத்துப் பிள்ளையார் பாடல் ஒன்று ஞாபகத் துக்கு வருகிறது.

“மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றலும்
என்னையுங் கண்டேன் உன்னையுங் கண்டேன்
நின்னிலே அனைத்தும் கண்டேன் என்னை
நின்னைக் காணுத் மாந்தர்
தன்னைக் காணுத் தன்மை யோரே.”

இதுவே “பரிசுத்த ஆவி”யைப் பெறு தலாகும். ஆன்ம தரிசனம் செய்த பின்னரே ஈஸ்வர தரிசனம் சித்திக் கும். பாவம் எங்கே? பறந்தோடிப் போய்விட்டது.“அன்னைபோல் அருள் மிகுத்து மன்னுஞான வரதனே, என்னையே எனக்களித்த நின்னை யானும் நினைவனே” என்கிற மெய்ம் மொழி வாழ்வில் கைகூடும். பாவம் அருகே என்றும் அணுகாது. சௌக்கியமாய் வாழலாம். சுகமா யிருக்கலாம்.

நன்றி : சித்தாந்தம் 1938.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**அத்தியாயம்-13**

**க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்**

பகுதி — 3

இந்தப் பரந்த பூவுலகில் எத்தனை எத்தனையோ வகை வகையான உயிர் இனங்கள் வாழ்கின்றன. அவற்றுள் மனித இனத்திற்குத் தனிப்பெருமை உண்டு. ஏன்? ஏனைய உயிரினங்களை அடக்கி ஆளவல்ல ஆற்றல் இம்மனிதனுக்குத்தான் உண்டு. உருவத்திலும் ஆற்றலிலும் மனிதனை விட மிகப் பெரியது யானை. அதைத் தன் கையிலுள்ள சிறு அங்குசத்தால் மனிதன் அடக்கி விடுகிறான். அதோ சிங்கத்தைப் பாருங்கள்! அப்பப்பா! என்னே! அதனது உறுமல், என்னே அதனது கம்பீர நடை, அச்சமூட்டும் தோற்றம்! அந்தச் சிங்கம் இம்மனிதனை விட உடல் ஆற்றலில் பன்மடங்கு உயர்ந்தது. அதனது ஒரு அறைக்கு இவனால் ஈடுகொடுக்க முடியாது. அத்தகைய சிங்கத்தையும் இம்மனிதன் தன் கையிலுள்ள சாட்டையால் அடக்கி வாழ்கிறான். பார்க்கப் பயங்கரமாயுள்ள புலியையும் இவன் பூனையைப் போல அடக்கி விடுகிறான். இவற்றையெல்லாம் நாம் சர்க்கஸ்களிலும், மிருகக்காட்சி சாலையிலும் பார்க்கிறோமில்லையா!



இந்த ஆறடி உயரமுள்ள சிறு மனிதன் ராக்கெட் மூலம் விண்ணில் எவ்வளவு வேகமாகப் பறக்கிறான்! நீரினுள் எவ்வளவு அற்புதமாக நீர் மூழ்கி மூலம் மிதக்கிறான்? கட்புலனாகாத அணுவையும் பிளந்து விட்டானே இவன்! இவனுக்கு இத்தனை சக்தியும் அறிவும் எங்கிருந்து வந்தது? ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் ஒருவர் பேசுவதை இவன் தன் வீட்டில் உள்ள டெலிபோனைக் காதில் வைத்துக் கொண்டு கேட்கிறானே, என்னவிந்தை! அது மட்டுமா? உலகின் ஒரு மூலையில் உள்ள ஒருவனை இவன் மறுமூலையில் அமர்ந்து கொண்டு 'டிவி' மூலம் கண்ணால் கண்டும் விடுகிறானே! கோடிக்கணக்கான மைல்களுக்கப்பால் உள்ள நட்சத்திரங்களின் தூரத்தை அங்கே போகாமலேயே இவன் துல்லியமாகச் சொல்லி விடுகிறானே? எந்த விதத் தராசும் கொண்டு நிறுக்காமல் பூமியின் எடை இத்தனை கிலோகிராம் என்று சொல்லுகிறானே! உண்மையிலேயே இவன் மிகவும் அதிசயமானவன், அற்புதமானவன் இல்லையா!

அது சரி! இதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும்! இத்தனை பெருமைகளையுடைய மனிதன் மன அமைதியின்றித் தெருத்தெருவாய் அலைகிறானே? அது ஏன்? சிங்கம், புலி யானையை எல்லாம் அடக்க வழிகளைக் கண்ட இந்தப் பொல்லாத மனிதனை அவனுக்குள்ளே உள்ள கண்ணுக்குப் புலப்படாத 'மனம்' என்ற ஒன்று எவ்வளவு பரிதாபமாக அடக்கி ஆட்டுகிறது? அது மட்டுமா? அவனது உடலிலேதான் எத்தனை எத்தனை நோய்கள், உபாதைகள், தொல்லைகள்! அவற்றிலிருந்து விடுபட அவனுக்கு மார்க்கம் தெரியவில்லையே!

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

மாத்திரை மாத்திரையாக விழுங்கினாலும் அவனைப் பிடித்துள்ள நோய்ப் பட்டாளம் அவனை விட்டு அகலுவதாகக் காணோமே! உடல் வியாதி, மனவியாதி - இவையிரண்டும் மாறி மாறி அவனைப் பிடித்து ஆட்டுகின்றனவே! பால்யப் பருவம், இளமை, வாலிபம், வயோதிகம், நரை, திரை, மூப்பு—இவற்றிலிருந்து விடுபடுவதற்கான வழி தெரியாது அவன் திக்கு முக்காடுகின்றானே! ஏன்? பிறப்பு, இறப்பு எனும் சக்கரத்தில் அவன் சுற்றிச் சுழல்கின்றானே, ஏன்?

(39-ம் பக்கம் பார்க்க)

# ★ நவக்ரஹங்கள் ★

ஆத்ரேய கோத்திரத்தில் அத்ரி மஹரிஷிக்கு மகனுகப் பிறந்தார் சந்திரன். இவருடைய அழகிய தோற்றத்தையும், குணத்தையும் பார்த்து பிரம்மா இவரை பிராமண ஜாதிக்கு ராஜாவாக்கினுர். இவர் அரசர் ஆனதால் தக்ஷப்ரஜாவதி தன் கன்னிகைகளான 27 (இருபத்தி ஏழு) நக்ஷத்திரங்களை இவருக்கு அளித்தார். இதில் ரோஹினி என்பவள் மிகவும் அழகாக இருந்ததால் அவள் அழகில் மயங்கி அவளிடமே இருந்தார். இதனுல் மற்ற பெண்கள் தந்தையிடம் முறையிட்டனர். தந்தை இவரை அழைத்து நல்ல வார்த்தைகள் கூறினுர். "சரி" என்று வாக்கு கொடுத்து விட்டு மறுபடியும் பழைய படியே வாழ்க்கை நடத்தினுர். இதனுல் கோபம் கொண்ட தந்தை உனக்கு க்ஷயரோகம் வரட்டும் என்று சாபம் கொடுத்தார்.

ஒரு முறை இவர் செய்த யாகத்துக்கு வந்த ப்ருஹஸ்பதியின் பத்தினி தாரையிடம் தகாதமுறையில் நடந்து கொண்டார். இதனுல் தேவேந்திரன் சந்திரனிடம் போர்த் தொடுத்தான். ஏற்கனவே இந்திரனிடம் கோபம் கொண்ட அசுரர்கள் சந்திரனிடம் சேர்ந்து கொண்டார்கள். சண்டை பயங்கரமாக நடந்தது. பிரம்மா வந்து சமாதானம் செய்தார். தாரையிடம் தவருக நடந்து கொண்டதால் நோய் இவரை தாக்கி உடல் மாசுற்றது. மேலும் மாமனுரின் சாபமும் இவரைத் தாக்க, உடல் வேதனை தாங்க முடியாமல் சிவனிடம் சரணமடைந்தார். சிவபகவான் சந்திரனை பதினைந்து நாள் உடல் குறைந்தும், அமாவாசைக்குப் பிறகு வளர்ந்து வரட்டும் என்று ஆசீர்வதித்தார். சந்திரனை தன் தலையில் ஆபரணமாக வைத்துக் கொண்டார். ஆகவே சிவனுக்கு "சந்திரசூடன், சந்திரமௌலி, சந்திரகேசன்" என்ற பெயர் உண்டாயிற்று.

சதுர்த்தி தினத்தன்று சந்திரன் விநாயகரை பார்த்து நகைத்ததால் விநாயகர் 'ஒருவரும் உன்னைப் பார்க்க தகாதவனுக போவாய்' என்று சபித்தார். தன் தவற்றை உணர்ந்து மன்னிப்பு கேட்டதால், அவரை மன்னித்து 'நான்காம் பிறை ஒருநாள்

## சந்திரன்

மாத்திரம் உன்னை யாரும் பார்க்கக் கூடாது. அப்படி உன்னைக் கண்டால் வீண்பழி ஏற்பர்' என்று கூறி, சந்திரனை ஆபரணமாகத் தலையில் வைத்துக் கொண்டார். நான்காம் பிறை பார்த்தால் நமக்கு துன்பம் வருவதை இப்போதும் நாம் அனுபவிக்கிறோம் அல்லவா?

சந்திரகிரகணம் மக்களுக்கு இன்பமூட்டி உடலையும், மனத்தையும் வளர்க்கிறது. அமிர்தத்தை சந்திரன்

திருமதி. உமா ஹரிஹரன்,
அலிபி

வளர்ப்பதால் ஸோமன் என்ற பெயரும் உண்டு. கார்த்திகை மாதம் ஸோம வாரத்தன்றே சந்திரன் தோன்றினுன்.

சந்திரன் பெண்மை குணம் உள்ளவர் ஆதலால் அழகில் சிறந்தவர். இன்பம் ஊட்டுவதில் வல்லவர். வெள்ளரசையும் வெண்பூ முத்து மாலை அணிந்தவரும், வெண் கொடையின் கீழ் வெண்கொடை பூட்டிய தேரில் அமர்ந்து மேருவை வலம் வருபவர். சூரியனுக்குத் தென்கிழக்கில் சதுரமான மண்டலத்தில் ஸ்படிக வடிவுடன், கிழக்கு முகமாக வீற்றிருப்பவர். ஜலதேவதையையும், பார்வதியையும் வழிபட்டால் இவருக்கு மகிழ்ச்சி.

வெள்ளை நிறம் வளர்பிறையில் நல்லதையும், தேய்பிறையில் கெடுதலையும் செய்பவர். மாதுர்காரகன், கடகராசி, ரிஷபராசியில் 13 உச்சம். ஜாதகத்தில் சந்திரன் உச்சனுக இருந்தால், செல்வந்தர், கல்வி, அறிவு, விடாமுயற்சி உள்ளவர்களாக இருப்பார்கள். சந்திரதசைக்கு சாந்தி வால்மீகிராமாயணம், சுந்தர காண்டம் 5-வது சர்க்கம் சந்திரோதய பாராயணமாகும்.

சந்திரனுக்கு கிரகபாஷை தமிழ். ஆளும் தேசம் யமுனை. ப்ரதிமை செய்யவேண்டிய லோகம் ஸ்படிகம். பார்க்கும் திக்குதென்கிழக்கு. பிடித்த நிறம் வெள்ளை, பிடித்த சுவை தித்திப்பு. உலோகம் ஈயம், ப்ரியமான தான்யம் அரிசி, ப்ரத்யதி தேவதா கௌரி. பூஜிக்கும் தேவதை பார்வதி. அதி தேவதா ஜலம், வாகனம் முத்து வாகனம்.

சந்திரனை வழிபட்டால் வலிப்பு, குஷ்டம், க்ஷயம், அம்பாளின் கோபம் முதலியன நீங்கும்.

சந்திர பகவான் இருக்கும் தலங்கள்:— திருப்பதி, இந்தளூர்.

ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய சந்திர பகவானின் கீர்த்தியை பாடுவதால், பகவானின் அனுக்கிரகமும், வைத்திய சாஸ்திரத்தில் சிறந்த அறிவும், மனச்சாந்தியும் உண்டாகும்.

ஸ்லோகம் பின்வருமாறு:

**சந்திரன்** (திங்கட் கிழமை)

ராகம்: அஸாவேரி    தாளம்: மட்யம்

**பல்லவி**

சந்த்ரம் பஜமானஸ ஸாது ஹ்ருதய
ஸத்ருசம் (சந்த்ரம்)

**அனுபல்லவி**

இந்த்ராதி லோகபாலேடித தாரேசம்
இந்தும் ஷோடச கலாதரம் நிசாகரம்
இந்திரா ஸஹோதரம் சுதாகரம் அனிசம்
(சந்த்ரம்)

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# திருமலையில்
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| 1. | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| 2. | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| 3. | டி. பி. சி. 3வது வரிசை (அறைத் தொகுதிகளைக் கொண்ட காட்டேஜ்) | |
| | ஹீட்டர் வசதி கொண்டது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |
| 4. | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| 5. | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| 6. | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| 7. | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 15/- |
| 8. | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 9. | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 15/- |
| 10. | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 11. | திருமணத்திற்கான காட்டேஜ் | ரூ. 30/- |
| 12. | சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| 13. | டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| 14. | எஸ். வி. விருந்தினர் விடுதி, திருமலை | |
| | பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| | மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| | சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| 15. | எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| 16. | திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்) | |
| | ரூயா காட்டேஜ் | ரூ. 80/- |
| | கோகினேனி காட்டேஜ் | ரூ. 80/- |
| | சி. சி. காட்டேஜ் | ரூ. 100/- |
| | எஸ். எம். சி. கிழக்கு எண் : 9 | ரூ. 50/- |
| | ஏ. டி. சி. எண் : 39 | ரூ. 80/- |

### சரணம்

சங்கர மௌளிவிபூஷணம் சீதகிரணம்
சதுர்புஜம் மதநச் சத்ரம் க்ஷபாகரம்
வேங்கடேச நயநம் வீராண்மநோ ஜநநம்
விதும் குமுத மித்ரம் விதி குருகுஹ
வக்த்ரம்
சாசங்கம் கீஷ்பதி சாபாநுக்ரஹ பாத்ரம்
சரச்சந்திரிகா தவளப்ரகாச காத்ரம்
கங்கண கேயூரஹார மகுடாதிதரம்
பங்கஜரிபும் ரோஹிணீ ப்ரிய கரம் சதுரம்
(சந்த்ரம்)

### சந்திர கீர்த்தனத்தின் அர்த்தம்

சாது மக்களின் மனம் போன்றவரே, இந்திரன் முதலிய லோக பாலர்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுபவரே, தாரையின் கணவரே, மக்களின் மனதைக்குளிரச்செய்பவரும், 16 கலைகள் உள்ளவரும், இரவை உண்டு பண்ணுபவரும், இலட்சுமி தேவியின் சகோதரரும், அமிருதத்தை உண்டு பண்ணுபவரும், குளிர்ந்த கிரணங்களை உடையவரும், நான்கு கைகளை உடையவரும், மன்மதனுக்கு குடையாய் இருப்பவரும், வேங்கடேச பெருமாளுக்குக் கண்ணாக இருப்பவரும், விராட் புருஷனுடைய மனதில் தோன்றியவரும், சோமலதையின் ரஸஸ்வரூமானவரும், ஆம்பல் புஷ்பத்தின் சிநேகிதரும், பிரம்மாவின் குருவான குஹனது முகமாக இருப்பவரும், முயலை அடையாளமாக உள்ளவரும், பிரகஸ்பதியின் அனுக்ரகத்துக்கும், சாபத்துக்கும் பாத்திரமாக இருப்பவரும், நிலா போல் வெண்மையான மேனியினால் பிரகாசிப்பவரும், காப்பு, தோள்வளை, பூமாலை, கிரீடம் இவைகளை தரித்தவரும், தாமரைக்கு விரோதியும், ரோகிணீ தேவிக்குப் பிரியத்தைச் செய்வதில் ஆசை உள்ளவருமான சந்திர பகவானை எப்பொழுதும் சேவிப்பாயாக.

### கீர்த்தனத்தின் பலன்

இக் கீர்த்தனத்தைப் பக்தியுடன் பாட்டாகவோ அல்லது ஸாஹித்யமாகவோ ஸ்தோத்திரமாகவோ சொல்பவருக்குப் பகவானின் அனுக்கிரகம் கிடைப்பதுடன், வைத்திய ஸாஸ்திரத்தின் சிறந்த அறிவும், மனச்சாந்தியும் உண்டாகும் என்பது நிச்சயம். திங்கட் கிழமை இவருக்கு உவந்த நாள். ★

முன்னுரை :

திருமால் கோயில் கொண்டுள்ள திருவேங்கடமலை பல்லாயிரக்கணக் கான ஆண்டுகளாகவே சீரும், சிறப் பும் பெற்ற புண்ணியத்தலமாகத் திகழ்ந்து வருவதை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். இப் பூவுல கில் வாழும் பக்தர்களின் பிறவிப் பிணியை நீக்கி முக்தியைத் தரவல் லது திருவேங்கடமலை; இப் புண் ணிய மலைக்கு நாள்தோறும் பற்பல திக்குகளிலிருந்தும் பல்லாயிரக்கணக் கான அடியார்கள் வந்து தூப தீபத் துடன் ஆராதனை செய்து திருமாலை வணங்கிப் பெறும் பேறு பெற்றுச்

# ஆழ்வார்கள் போற்றிய திருவேங்கடமலை

செல்வதை அனைவரும் அறிவர். இத்தகைய சிறப்புடைய ஸ்ரீநிவாசனை ஆழ்வார்கள் சிறப்பித்துப் பாடியிருப்பதை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்னும் நூலால் அறிகிறோம். ஆழ்வார்கள் போற்றிப் பாடிய திருவேங்கடமலை யின் சிறப்பைச் சில ஆழ்வார் பாடல்களிலிருந்து ஈண்டுக் காண்போம்.

குலசேகராழ்வார்:— திருமாலைத் துதித்துப் பாடியவர்களில் சிறந்த வராகக் கருதப்படுபவர் குலசேக ராழ்வாராவார். இவர் திருமால் கோயில் கொண்டுள்ள திருவேங்கட மலையில் குருகாய்ப் பிறக்க வேண்டு மென விரும்புகிறார். குருகுக்கு இறக்கையிருப்பதால் வேறொருயிடத் திற்குச் சென்று விடுமாதலால் திரு வேங்கடமலைச்சுனையில் மீனாய்ப் பிறக்க வேண்டுமெனக் கூறுகிறார். மேலும் எம்பெருமானை யென்றும் பிரியாமல் இருப்பதற்கு ஸ்ரீநிவாசன் எச்சில் உமிழும் பொன்னாலாகிய பாத்திரமாகப் பிறக்க வேண்டுமென பேரவா கொண்டார். இக் கருத் தைக் குறிக்கும் பாடிலடிகளாவன:-

''மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன்
தான் உமிழும்
பொன் வட்டில் பிடித்துடனே புகப்
பெறுவன் ஆவேனே''.

மேலும் குலசேகராழ்வார் ஒவ் வொரு பிறப்பினும் ஒவ்வொரு பிறப்பு சிறந்ததாகக் கருதித் திரு வேங்கடமலையின் செண்பகப் பூ வாகவோ, புதராகவோ, பக்தர்கள் நடந்து செல்லும் பாதையாகவோ, படியாகவோ, மலையுச்சியாகவோ பிறக்க வேண்டுமென்று கூறினார். ''எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே'' என்றுகூறி இறை வனைச் சரணாகதியடைவதாகப் பாடி



யிருப்பது குலசேகராழ்வார் திரு மாலின்பால் கொண்டிருந்த அளவிட முடியாத பேரன்பைக் காட்டுகின்ற தன்றோ!

நம்மாழ்வார் : திருவேங்கடப் பெருமானைத் துதித்துப் பாடிய ஆழ் வார்களில் நம்மாழ்வார் என்ற அடி யாரும் ஒருவர். இவர் வேங்கட வனை நோக்கி ''வேங்கடவா நான் ஒழிவில் காலமெல்லாம் உங்களுடன் வாழ்ந்து என்றென்றும் குற்றமில் லாத சேவகம் செய்து வாழ வேண் டும்'' என்று கூறினார். மேலும் ஸ்ரீநி வாசனைத் துதிப்பவர் தேவர்களும், தேவர்களுக்குத் தலைவனான இந்திர னும் வாழ்கின்ற தேவருலகுச் செல் வர். திருமாலைத் துதிப்பவர்க்கு மூப்பும், பிறப்பும், இறப்பும் பிணி யும் நீங்கவும், பேரின்ப வாழ்வு கிடைக்குமாகையால் வீணாக வாழ் வாழ்நாளைக் கடத்தாமல் இப் போதே திருவேங்கடவனைத் துதிப் பாயாக என்று பக்தர்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். இக் கருத்தைக் குறிக்கும் பாடலடி களாவன :-

''வைத்த நாள் வரை எல்லைக் குறுகிச்
சென்று
எய்த்திளைப்பதன் முன்னம்
அடைமினோ
பைத்த பாம்பணையான் வேங்கடம்''

திருமழிசையாழ்வார் : இவர் அற்புதமான காட்சியொன்றை நமக் குக் காட்டுகிறார். ஆகாயத்தில் உலவும் சந்திரனைத் தனது துதிக்கை யினால் பிடித்து வந்து ஸ்ரீநிவாசன் சந்நிதியில் எப்போதும் எரியும் நந்தா விளக்காக வைக்க வேண்டு மென்று ஒரு யானை தன் துதிக்கையை மேல்நோக்கி நீட்டியபடியேயிருந் தது. மெய்மறந்து இக் காரியத்தி லிருந்தபடியால் வில்லோடு வேடுவர் பலர் தன்னை வளைத்துக் கொண்டதை அவ்யானை கவனிக்கவில்லை. இத்தகைய சிறப்பு வாய்ந்த திரு வேங்கடமலையை நாமனைவரும் துதிக்க வேண்டுமென்கிறார். இக் கருத்தைக் குறிக்கும் பாடலடிகள்:-

''வைப்பன் மணி விளக்கா மாமதியை
மாலுக்கென்

புலவர் மு. மணி எம்.ஏ., பி. லிட்.
வேலூர்.

றெப்பொழுதும் கை நீட்டும்
யானையை—எப்பாடும்
வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும்
வேங்கடம்''

மேலும் யானைகள், சிங்கங்கள், நவ ரத்தினங்கள். புஷ்ப மரங்கள், மற்றும் நவமணிகளைக் கொழித்துக் கொண்டு வந்து வீழ்கின்ற அருவிகள் பாயப்பெற்ற வளமான காடுகள், குரங்குகள், வேடர்கள் ஆகிய இவையாவும் கொண்ட மலை வேங்கடமலை என்று சிறப்பித்துப் பாடியுள்ளார்.

''வேங்கடமே விண்ணோர் தொழுவதும்
மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய்
தீர்ப்பதுவும்'' என்ற

பாடலடிகளால் தீராத வினை தீர்ப்பதும் தேவர்கள் பலரும் தொழுது வணங்கவும் பல சிறப்புக்களையுடையது என்று திருமழிசையாழ்வார் பாடியுள்ளார்.

பேயாழ்வார்: பேயாழ்வார் பாடல்கள் கற்பனைவளம் மிகுந்தவை. பெருமாள் சந்நிதிக்குப் போவோர் வாய் கொப்பளித்துக் கை கால் சுத்தம் செய்து கொண்டு பின் புஷ்பங்களைப் பூஜைக்குக் கொண்டுபோவது வழக்கம். அதைப் போலவே மலையில் வாழும் யானைகளும் தங்கள் மத்தகம், காது முதலியவற்றிலிருந்து வடிகின்ற மத நீரால் வாய் கொப்பளித்தும், அருவி நீர் போலக் காலளவும் பெருகுகின்ற மத நீரால் கால்களைக் கழுவிக் கொண்டும் பொய்கையிலுள்ள தாமரைப் பூக்களைப் பறித்துத் திருமாலின் திருவடியில் சமர்ப்பித்து வணங்குவதாகக் கற்பனை செய்து பாடியுள்ளார். மேலும் திருமலையிலுள்ள ஒரு யானை மலை முகட்டில் படிந்திருந்த மேகத்தை எதிரியான தொரு யானையென்று எண்ணி வேகமாகச் சென்று தன் துதிக்கையால் குத்தியது. இக் காட்சியைக் கண்ட யாளி யொன்று யானையின் மதத்தை அடக்க எண்ணி அதன் மீது பாய்ந்து அதன் கொம்பை முறித்தெறிந்து, வாய்விட்டு அலறி விழும்படி அதைக் கொன்று கர்ஜித்தது.

''களிறு முகில் குத்தகையெடுத்தோடி
ஒளிறு மருப்பொசி கையாளி—பிளிறி
விழக் கொன்று நின்ற திருவேங்
கடமே''

இத்தகைய சிறப்புடையது இறைவன் உறையும் திருமலையாகுமென்று பாடினார் பேயாழ்வார்.

பூதத்தாழ்வார்: திருவேங்கட மலையில் வாழும் குரங்குகளும் ஸ்ரீநிவாசன்பால் அளவில்லாத பக்தியுடையன என்பதைத் தன் பாடலில் கூறியுள்ளார்.

திருமங்கையாழ்வார்: இவர் பாரத தேசம் முழுவதும் சென்று பல தலங்களைத் தரிசித்துப் பல பாடல்களைப் பாடினார். அவர் தன் நெஞ்சை நோக்கித் திருவேங்கட மலையை யென்றும் நினைத்து வணங்குவாயாக என்று கட்டளையிடுகிறார். நாய் போன்ற யான் தங்களைச் சரணடைந்தேன். இனியான் தங்களை என்றும் விடேன் என்று பாடுகிறார்.

திருமலையின் இயற்கைக் காட்சிகள் திருமங்கையாழ்வாரைப் பெரிதும் கவர்ந்தன. அவர், திருவேங்கட மலைச் சிறப்பை,

'' குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி
மருளிசை பாடும் வேங்கடம்''

என்றும்,

'' கானவரிடுகாரகில் புகையோங்கு
வேங்கடம்''

என்றும்,

'' வேய்கள் நின்று வெண் முத்தம்
சொரி வேங்கடம்''

என்றும் பலவாறாகப் பாடியதை யறியலாம்.

ஸ்ரீ ஆண்டாள்: திருமாலின் எழிற் கோலத்தைக் கண்டு அளவில்லாத அன்பு கொண்டு ஸ்ரீ ஆண்டாள் பல பாடல்களைப் பாடியருளினாள். திருவேங்கடத் தெம்பெருமான் தன்னை மணக்க வேண்டி ஸ்ரீ ஆண்டாள் மேகத்தை நோக்கி,

'' சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்
முகில்காள் மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே
நிரந்தேறிப் பொழிவீர்காள்''

என்று விளித்துத் தன் காதல் நோயை அவன் பால் கூறும்படி மேகத்தைத் தூது விடுகிறாள். இறுதியில் திருமாலையே மணந்து முத்தியடைந்தாள்.

முடிவுரை: திருவேங்கடம் பக்தியுலகத்தின் உன்னதச் சிகரமாக விளங்குகின்றது. வானோர் மனச் சுடரைத் தூண்டும் மலையாகவும், வானோர்க்கும், மண்ணோர்க்கும் வைப்பாகவும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகத் திருமலை விளங்குகிறது. இவ்வாறாகப் ஆழ்வார்கள் துதித்துப் பாடிப் புகழ்ந்த திருவேங்கட மலையின் பெருமையைக் கூறுதல் அளவிடற்கரிய செயலாம். நல்வினை, தீவினையகற்றி முக்தி தந்து அடியார்களைக் காக்கும் திருவேங்கடவனை நாமனைவரும் துதித்து வழிபடுவோமாக!

## ஈடு - வ்யாக்யானங்கள்

| | | |
|---|---|---|
| ஆறாயிரப்படி | — | திருக்குருகை பிரான் பிள்ளான் |
| ஒன்பதினாயிரப்படி | — | நஞ்சீயர் |
| பன்னீராயிரப்படி | — | நம்பிள்ளை அருளாள் திருவீதி பிள்ளை அருளியது |
| 24 ஆறாயிரப்படி | — | பெரியவாச்சான் பிள்ளை |
| 36 ஆறாயிரப்படி | — | வடக்கு திருவீதி பிள்ளை ஏற்படுத்தியது |
| ப்ரமாணத் திரட்டு | — | மணவாள மாமுனிகள் |
| த்ரமிடோபநிஷத் | — | வேதாந்த தேசிகர். |

மாரியம்மன் கோயில்களில் மிகப் புகழ் பெற்றது சமயபுரம் மாரியம் மன் கோயில். பிட்சாண்டார் கோயில் ரெயில் நிலையத்திலிருந்து வடக்கே மூன்று மைலிலும், திருச்சி-சென்னைப் பெரு வழியில் வடக்கே ஏழு மைல் தொலைவிலும் இருக்கிறது சமயபுரம். அடிக்கடி பஸ்கள் செல்கின்றன; சமய புரம் லால்குடித் தாலுக்காவைச் சார்ந்தது. இவ்வூருக்குக் கண்ண னூர், கண்ணபுரம், மாகாளிபுரம் என்றெல்லாம் பெயர்கள் வழங்கி வருகின்றன.

மாரியம்மன், சீதள கௌமாரி, மகா மாயை என்ற பெயர்கள் அம் மைக்கு உண்டு. மூல ஸ்தானத்தில் மாரியம்மன் நான்கு திருக்கரங்களு டன் வீற்றிருக்கும் கோலத்தில் அருள் பாலித்து வருகிறாள். அவ ளுக்குப் பின் ஐந்தலை நாகம் குடை பிடித்திருக்கிறது.

கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் துவார சமுத்திரத்தைத் தலை நக ராகக் கொண்டு ஆண்டு வந்த இரண் டாம் நரசிம்மன் என்ற அரசன்,

தாக ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இதை அக்கம் பக்கத்திலுள்ள குடி யானவர்கள் கர்ண பரம்பரையாகச் சொல்லி வருகிறார்கள்.

சமயபுர மாரியம்மன் ஆதியில் விஜயநகர மன்னர்களுடைய குல தேவதைகளுள் ஒருத்தியாக வணங் கப்பட்டு வந்தாள். அவர்கள் அரசு வீழ்ச்சியுற்ற போது அந்தச் சிலை மாத்திரம் ஒரு தந்தப் பல்லக்கில் இங்கே கொண்டு வரப்பட்டது. அம் மன் சிலையைக் கீழே வைத்து விட்டுப் பல்லக்குச் சுமப்பவர்கள் உண

# ★ சமயபுரம் மாரியம்மன் ★

சமயபுரம் சுமார் மூவாயிரம் மக்கள் தொகை கொண்ட ஊர். பஞ் சாயத்து ஆட்சியின்கீழ் உள்ளது. ஊரில் தங்குவதற்குச் சத்திரங்கள் உள்ளன. ஆலயம் ஊருக்கு நடுவில் இருக்கிறது.

கோயில் கீழ் மேலாக 280 அடி யும், தென் வடலாக 150 அடியும் உள்ளது. கோயிலுக்கு முன்னால் தகரக் கொட்டகை இருக்கிறது. மூன்று பிராகாரங்கள் கொண்டது கோயில். ஆசார வாயில் வழியாக உள்ளே நுழைந்து செல்லலாம். மூன் றாம் பிராகாரத்தில் தென் கிழக்கு மூலையில் பௌர்ணமி மண்டபமும், தென் மேற்கு மூலையில் நவராத்திரி மண்டபமும், வடகிழக்கு மூலையில் வஸந்த மண்டபமும் இருக்கின்றன.

இரண்டாம் பிராகாரத்திற்குள் நுழைந்ததும் மண்டபத்தின் மேற்கில் விநாயகர் கிழக்கு நோக்கி எழுந் தருளியிருக்கிறார். நடுவில் கொடிக் கம்ப மண்டபம் இருக்கிறது.

உற்சவ அம்மன் சந்நிதிக்குப் பக் கத்தில் கருப்பண்ணசாமி சந்நிதி இருக்கிறது. இவர்கள் இருவரும் கொடிக் கம்பத்துக்கு நேர் வடக்கே ஓரமாகச் சந்நிதியில் தெற்கு நோக்கி எழுந்தருளி யிருக்கின்றனர்.

சோழ மன்னனுக்குப் படைத் துணை யாக வந்து அவனுடைய எதிரிகளை விரட்டியடித்தான். அவன் மகன் வீர சோமேசுவரன் தமிழ் நாட்டில் ஹொய் சாளர் ஆதிக்கத்தை நிறுவக் கண்ணனூரைத் தலைநகராக்கி, அதற்கு விக்கிரமபுரம் எனப் பெய ரிட்டான்.

இவன் கண்ணனூரில் "பொய்சளே சுவரம்" என்ற சிவாலயத்தை எடுத் தான். அங்கே கோயில் கொண்டுள்ள மூர்த்திக்குப் பெயர் சளீசரமுடைய நாயனார் என்று கல்வெட்டுக்களில் பெயர் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இவ்வாலயம் இன்று போஜராஜன் கோயில் என்று வழங்குகிறது.

ஆலயத்தின் மண்டபங்கள் இடிந்து கிடக்கின்றன. பக்கத்திலே ஒரு கோட்டை இருந்திருக்க வேண்டு மென்று இடிந்த கட்டிடங்களின் மூல மும் சிதைந்த அஸ்தி வாரங்களி லிருந்தும் எளிதில் அறியலாம்.

போஜராஜன் கோயிலுக்குப் பக் கத்தில் பத்தடி நீளமுள்ள சயனத் திருக்கோலத்திருமால் வடிவொன்று இருந்தது. மாரியம்மன் கோயிலின் வெளி மண்டபத்தில் அது நிறுத்தப் பட்டிருக்கிறது. அது முன்னிருந்த இடத்தில் பெரும் புதையல் இருப்ப

வருந்தச் சென்று திரும்பி வந்த போது அதனைத் தூக்க அவர்களால் இயலவில்லை.

அவர்கள் இந்த விக்கிரகத்தை ஒரு குடிசையில் வைத்து விட்டுச் சென்று விட்டார்கள். கி. பி. 1804-இல் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அம்மனைப் புதிய ஆலயம் கட்டிப் பிரதிஷ்டை செய்தார். ஆலயத் துக்கு நிலபுலன்களும், அம்மனுக்கு வேண்டிய பொன் நகைகளும் அளித் தார்.

"சன்மிஷ்டை"
தஞ்சாவூர்.

இவ்வம்மன் மகா சக்தி வாய்ந்த வள். தீராத நோய்களைத் தீர்த்து, மாறாத பிணிகளைப் போக்கி இஷ்ட காரியங்களை நிறைவேற்றி வைக் கிறாள். வைசூரி, காலரா, முதலான தொற்று வியாதிகளை உடனே தீர்த்து வைக்கிறாள்.

இவ்வாலயம் ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த சுற்றுக்கோயில்களுள்ஒன்று. ஆதியில் ஸ்ரீரங்கநாதன் தேவாலயத் திலேயே இவ்வம்மை இருந்ததாகக் கூறுவர். சந்நிதியினின்றும் இராமா னுசர் காலத்துக்குப் பல நாள் பின் னர் அம்மன் சமயபுரம் எழுந்தருளிய தாகவும் கூறுகிறார்கள்.

பகவான் (கிருஷ்ணனுக அவதரிப்பதற்கு முன்) யோகமாயையான அம்பிகையை, (தேவகியின் வயிற்றில் உள்ள கருவை ஆயர்பாடியில் உள்ள ரோகிணியின் கருப்பையில் சேர்க்கும்படி கூறி) யசோதையின் வயிற்றில் அவதாரம் செய்யும்படி பணித்தார். பிறகு குழந்தைகள் மாறிக் கம்சனுல் பாறையில் எறியப்பட்ட போது மாயை வானில் தோன்றி, பகவான் ஆயர்பாடியில் தோன்றியுள்ளதை அவனுக்குக் கூறி மறைந்தாள். பிரதியுபகாரமாக அவளை எல்லாக் கிராமங்கள் தோறும் வழிபடும்படி பகவான் ஏற்பாடு செய்தார் என்பர். கொள்ளிட நதி அண்ணனையும் (ஸ்ரீரங்கநாதர்) தங்கையை (மாரியம்மன்) யும் பிரிக்கிறது.

தைமாதத்தில் பூசத்தன்று மாரியம்மன் கொள்ளிடநதியின் தென் கரைக்கு எழுந்தருளித் திருமஞ்சன மாடுவாள். அன்றைத் தினம் ஸ்ரீரங்கம் அரங்கனிடமிருந்து விலைஉயர்ந்த பட்டுப் புடவைகள், மாலை முதலியன பிறந்தகச் சீர்வரிசையாக அம்மைக்கு அனுப்பப்படும்.

மூல மூர்த்திக்கு அபிஷேகம் செய்வது இல்லை. உற்சவமூர்த்திக்கு எல்லா அபிஷேகங்களும் நடைபெறும். அம்மனுக்கு மாசிமாதம் கடைசி ஞாயிற்றுக்கிழமையன்று பூச்சொரியல் விழா நிகழும். அதற்கு ரூபாய் இருபதினுயிரம் முதல் முப்பதினுயிரம் வரையிலான வாசனைப் புஷ்பங்கள் அபிஷேகம் செய்யப்படும். அதைக்காணக் கோடிக்கண் வேண்டும்! இதன்பின் நான்கு வாரங்களுக்கு அம்மனுக்கு நீர்மோரும், பானகமும் நைவேத்தியமாக வழங்குவர். இதைப் பச்சைப்பட்டினி விரதம் என்பர்.

அம்மனுடைய வஸந்த விழாவின் இறுதி நாள் (வைகாசி மாதம் முதல் தேதி) பஞ்சப் பிராகாரவிழா அதி விமரிசையாக நடக்கும். ஆடிப்பூரம் நவராத்திரி ஆகிய விழாக்களும் ஆலயத்தில் மிகச் சிறப்பாக நடைபெறும். நாள்தோறும் அம்மனுக்கு நாலுகால பூஜை உண்டு.

சமயபுரம் மாரியம்மன் கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பது கிடையாது. உப்பு, வெல்லம், தானியங்கள், ஆடு, கோழி ஆகியவை காணிக்கையாகச் செலுத்தும் வழக்கம் இருந்து வருகிறது.

இத்தலத்தின் தலவிருட்சம் வேம்பு. கொள்ளிடத்தின் ஒருகிளை வாய்க்காலாகக் கோயிலுக்கு அருகே ஓடுகிறது. ஸ்தல தீர்த்தமான இது பெருவள வாய்க்கால் எனப்படும். கரிகாற் பெருவளத்தானுல் இது வெட்டப் பெற்றதால் இப்பெயர் பெற்றது. இவ்வூரில் உள்ள சூரப்ப நாயக்கன் குளத்தில் தெப்ப உற்சவம் நடைபெறும். அதற்குத் தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் எண்ணிறைந்த மக்கள் வந்து போவார்கள்.

ஆங்கிலேய தளகர்த்தரான ராபர்ட் கிளைவ், பிரெஞ்சுக்காரர் சேனைகளைச் சமயபுரத்தில் தோல்வியுறச் செய்து, ஆங்கிலேயர் ஆட்சியை நிலைநிறுத்திஞர். இதனுல் ராபர்ட்கிளைவ் இந்த அம்மனிடத்தில் வேண்டிக்கொண்டபடி திருப்பணிகள் செய்ததாகத் தெரிய வருகிறது. கி. பி. பதினெட்டாம் நூற்றுண்டில் நடந்த இச்சம்பவத்தால் சமயபுரம் சரித்திரப் பிரசித்தி பெற்றது. இது முதற்கொண்டு ஆங்கிலேயப் படையினர் இவ்வம்மனை மிக வரப்பிரசாதி என்று நம்பினர்; இவ்வூரை "சமயவரம்" என்றழைத்தனர். அதுமுதல் ஆங்கிலேயருக்கு இந்த அம்மனிடம் மிகுந்த பயபக்தி இருந்து வந்தது.

தமிழ் நாட்டிலுள்ள மாரியம்மன் கோயில்களில் எல்லாம் வணங்கப் படுபவள் இந்தத்துர்க்கை அம்மனே! இந்தத் துர்க்கை மகாவிஷ்ணுவின் யோக மாயை என்பர். "ஆயன் சகோதரியே, ஆஸ்தான மாரிமுத்து" என்று இவ்வம்மனைக் கிராம மக்கள் வழிபடுவதை எங்கும் காணலாம்.



#  தாரையும் போர்சியாவும் 

வான்மீகி எழுதிய இராமயணத்தைத் தமிழாக்கம் செய்தான் கம்பன். தனது காப்பியத்தின் தொடக்கத்தில் தனது நூலுக்கு மூல நூல், 'தேவபாடையாக சமக்கிருதத்தில் செய்யப்பட்ட மூன்று நூல்களுள் முதன்மையான நூலாகிய வால்மீகியைப் பின்பற்றிச் செய்யப்பட்டது' என்றும் கம்பன் கூறியுள்ளான். (கம்ப-பால: 10) தனது நூலுக்கு ஆதி நூல் வால்மீகியின் இராமாயணமாக இருந்த போதிலும் தவிர்க்க முடியாத சில காரணங்களினாலும், கால இடைவெளியினாலும் தனது காப்பியத்தில் முதல் நூலுக்கு மாறுபட்ட சில திருத்தங்களைச் செய்தான் கம்பன்.

அவ்வாறு கம்பன் ஆதி நூலில் இருந்து மாற்றிய அம்சங்கள் பலவற்றில் தாரை பாத்திரமும் ஒன்றாகும். பதிவிரதைகளுள் தாரையும் ஒருத்தியாகக் கருதப்பட்டு வருகிறாள்; இவ்வாறு இருந்தும் வாலி இறந்த பிறகு அவன் மனைவியாகிய தாரை வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனுக்கும் உரிமையாவதைக் கம்பனால் தாங்கிக்கொள்ள இயலவில்லை.

தனது மனைவியாகிய உருமையை, தனது அண்ணனாகிய வாலி அபகரித்துக்கொண்டதை வெறுக்கும் சுக்கிரீவன், அண்ணனின் மறைவுக்குப் பிறகு அவனுடைய மனைவியாகிய தாரையைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்டானானால், அவன் வாலியின் பேரில் குற்றம் சொல்வதில் பொருள் என்ன இருக்கிறது?

ஆகவே, ஆதி நூலில் காட்டப்பட்ட தாரையின் குணாதிசயங்களை மாற்றித் தனது காப்பியத்தில் புதியதொரு தாரையை உண்டாக்க நினைக்கின்றது கவிச் சக்கரவர்த்தின் உள்ளம். கைம்மைக் கோலத்தில் காணப்படும் தாரையின் உருவம் கவிஞன் கண்முன் நிற்கிறது; அதனை,

'மங்கல அணியை நீக்கி
மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்
குங்குமச் சாந்தம் கொட்டாப்
பொங்குவெம் முலைகள் பூசுக்
கழுத்தொடு மறைப் போர்த்த
நங்கை'

(கம்ப-கிட்கிந்தா: 625)

என்று குறிப்பிடுகிறான் கம்பன்.

வாலி இறந்துவிட்டதும் தாரை தனது மங்கல அணியை நீக்கி விட்டாள்; நறுமணம் கமழும் தேன் சிந்தும் மலர் மாலைகள் சூடுவதையும் விட்டு விட்டாள்; தனது மார்பகங்களில் சந்தனம் எழுதுவதை விட்டு விட்டாள்; பாக்கு மரத்தின் வரிகளைப் போன்ற வரிகளைக் கொண்ட கழுத்து வரைக்கும் தனது ஆடையைச் சுற்றித் தனது அழகினை மறைத்துக் கொண்டாள். கம்பன் கண்ட தாமரை கொண்ட கைம்பெண் கோலம் இது.

சுக்கிரீவன் இராமனிடம் குறிப்பிட்ட கெடு நாட்கள் கடந்து விட்டன. ஆகவே, இராமன் இலக்குவனைச் சுக்கிரீவனிடம் அனுப்பி, அவனது கடமையை நினைப்பூட்டுகிறான். சுக்கிரீவனோ களி மயக்கத்தில் ஈடுபட்டுக் கடமையை மறந்து விட்டான்.

''நன்றியைக் கொன்று, நட்பினையும், வாய்மையையும் அழித்து, சொன்ன சொல்லைப் பொய்யாக்கியவர்களைக் கொன்று நீக்குவது குற்றமாகாது'' (மேற்படி நூல்: 576) என்று கம்பராமன் கூறுகிறான்.

சுக்கிரீவனுடைய அமைச்சனாகிய அனுமனும் சுக்கிரீவனிடம் சென்று, ''சொன்ன கெடு தாண்டி விட்டது'' என்று கூறுகிறான். ''இராமனாலேயே நீங்கள் அனைத்துப் பேறுகளையும் பெற்றிருக்கிறீர்கள். இப்போது அவரை மறந்திருப்பதும், மகிழ்ச்சியில் ஈடுபட்டிருப்பதும் சரியா? எழுந்து கடமையைச் செய்யுங்கள்'' (வி. எஸ். சீனிவாச சாஸ்திரியாரின் இராமாயணப் பேருரைகள் தமிழாக்கம் கி. சாவித்திரி அம்மாள், கலைமகள் காரியாலயம் வெளியீடு பக்கம் 95.) என்று கடமை யுணர்வை ஊட்டுகிறான் வாயு மைந்தனாகிய அனுமன்.

'வாலி சென்ற வழி இன்னும் அடைபடவில்லை; அந்த வழியிலேயே நீயும் சென்று விட வேண்டாம். நான் வாலியை மட்டும் தான் கொன்றேன்; ஆனால் சத்தியத்தை மீறிய உன்னை மட்டுமல்ல, உன்னைச் சேர்ந்தவர்கள் அனைவரையும் கொன்றால்தான் என் மனம் திருப்தியடையும்.' (மேற்படி நூல் பக்கம் 97) என்றும் கூறிக் கோபமே வடிவாகிறான் வால்மீகியின் இராமன்.

இதனைக் கருத்தில் கொண்ட இலக்குவன் அம்பு பூட்டிய வில்லை ஏந்திக் கொண்டு சுக்கிரீவனின் இருப்பிடமான கிட்கிந்தை நோக்கிச் செல்லுகிறான்.

இலக்குவனின் சீற்றத்தினால் கிட்கிந்தையே பாழாகும் என்பதை உணர்ந்த கற்புக்கரசி தாரை இலக்குவனின் சீற்றத்தை மாற்றுவதற்குப் பெரு முயற்சி செய்கின்றாள்; வேறு வழியில்லை. அப்பெண்மணியைத் தவிர, அன்று அக்குரங்கினத்து அரசைக் காப்பாற்ற எவராலும் இயலவில்லை.

புலவர். பா. அன்பரசு, எம்.ஏ.பி.எட்.,
சேலம்-1.

'இலக்குவனின் சீற்றத்தை அவன் அரண்மனை வாயிலில் நுழையும் போதே மாற்றி விட்டால், அவன் என்ன நினைத்து வந்தானோ, அந் நோக்கத்தை மறந்து விடுவான்' என்று அனுமன் யோசனை கூறினான்.

அந்த அருமையான யோசனையை ஏற்றுக் கொண்ட தாரை ஆடவர் அனைவரையும் விலக்கி விட்டுத் தான் ஒருத்தியே தனது ஆயத்தார் புடை சூழ அரண்மனை வாயிலை அடைந்து இலக்குவனை எதிர் கொள்ளுகிறாள்.

இங்கு இலக்குவனைத் தாரை சமாதானப்படுத்துவதையும், சேக்சுபிரியரின் 'வெனிசு வணிகன்' (The Merchant of Venice) நாடகத்தில் வருகின்ற நாயகி போர்சியா, சைலக்கிடம் இரக்கத்தின் உயர்வினைக் கூறிக் கருணைக்கு மன்றாடுவதனையும் ஒப்பிட்டுப் பார்த்தலே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

தாமரை இலக்குவனிடம் விண்ணப்பிக்கும்முறையீட்டினைக் காண்போம். இங்கு, கம்பன் கண்ட தாரையின் முறையீட்டினையே ஆய்வோம்.

கோபத்தின் பிடியால் சிக்கி இருக்கும் எவரையும் சற்றுப் புகழ்ந்து பேசினோமானால் அவர்களின் கோபம் ஓரளவு அடங்கும். ஆகவே, அவ்வழியை அறிந்த தாரை இலக்குவனைப் பார்த்து, ''எல்லையற்ற காலம் நோன்புகள் நோற்ற ஆற்றல் உடையோர்க்கு அன்றி, இந்திரன் முதலியவர்க்கும் கிடைக்கப் பெறாத பேற்றினை யாம் உம்மால் பெற்றோம். அதாவது உமது திருவடிகள் எமது இல்லின்கண் வரப் பெற்றோம். இனிக் கவலை இல்லை. ஆழி வேந்தனாகிய இராமனின் திருவடிகளைப் பிரியாத நீ செய்த செயல் என்ன?'' (கம்ப—கிட்கிந்தா: 622) என்று மிக நயமாகப் பீடிகை போடுகின்றாள்.

''சிறியோராகிய யாம் தீமை செய்தால் பொறுக்கவேண்டியது உமது கடனன்றோ? உம்மைத் தவிர எம்மேல் இரக்கம் காட்ட வேறு எவரால் இயலும்? ஆயிரம் கோடி தூதர்கள் குரங்கினத்தை அழைத்து வர அனுப்பப்பட்டுள்ளனர். எமது நல்வாழ்விற்கு வழி வகுத்த உம்மையே இகழ்ந்தால் யாம் இம்மையிலேயே வறுமையடைந்து போவோமல்லவா?'' (கம்ப—கிட்கிந்தா: 631) என்று எளியவர் பால் வலியவர் இரக்கம் காட்ட வேண்டிய கட்டாயத்தைத் தாரை வலியுறுத்துகிறாள்.

'' இன்னா செய்தாரை ஒறுத்தல்
அவர் நாண
நன்னயம் செய்து விடல் ''

'' இன்னா செய்தார்க்கும் இனியவே
செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு? '' என்னும் தெய்வப் புலவரின் குறள் நெறி கம்பனின் மனத்தில் தலை தூக்குகின்றது.

தாரையோ மேலும் பேசுகிறாள்:

'' ஆண்டு போர் வாலி ஆற்றல்
மாற்றியது அம்பு ஒன்றுயின்
வேண்டுமோ துணையர் நும்பால்
வில்லினும் மிக்கது உண்டோ? ''

(கம்ப—கிட்கிந்தா: 632) என்று அபயம் அளித்தலின் அவசியத்தையும் கூறுகிறாள்.

சுக்கிரீவன் காலம் தாழ்த்தியமையின் காரணங்களை எடுத்துக் கூறி நினைத்ததைச் சாதித்துக் கொள்ளும் தாரையிடம் பலரும் பாடம் கற்றுக் கொள்ளலாம். (இராமாயணப் பேருரைகள் வி.எஸ். சீனிவாச சாஸ்திரியார், தமிழாக்கம் கி. சாவித்திரி அம்மாள், கலைமகள் காரியாலயம் வெளியீடு பக்கம்—97)

இனி, இந்தத் தாரையொடு போர்சியாவை ஒப்பிடுவோம். ஆங்கில நாடகாசிரியர் சேக்சுபிரியரின் 'வெனிசு வணிகன்' மிகப் புகழ் பெற்ற ஒரு நாடகமாகும். அதில் ஆசிரியர் உருவாக்கிய ஓர் ஒப்பற்ற பாத்திரம் யூத மதத்தைச் சேர்ந்த, அநியாய வட்டி வாங்கிப் பெருஞ் செல்வம் சேர்க்கும் கருணையற்ற கொடியவன் 'சைலக்' என்னும் பாத்திரமாகும். வெனிசு நகரத்திலுள்ள நல்லவர் வெறுக்கும் கல்மனம் படைத்தவன் சைலக்.

வெனிசு நகர வணிகர்களில் குறிப்பிடத்தக்கவன் அந்தோனியோ. இவன் சைலக்கின் வாடிக்கையாளர்களில் ஒருவன். சைலக்கினிடம் அநியாய வட்டிக்குக் கடன் பெற்று, அதனை வறுமையால் வாடும் மக்களுக்கு உதவுவான் அந்தோனியோ. ஆகவே, அவனை உயிரென மதித்தனர் அவ்வூர் மக்கள்.

அந்தோனியோவின் உயிர் நண்பன் பசானியோ. பசானியோவிற்கு அவ்வப் போது ஏற்படும் பணத் தேவைகளை நிறைவேற்றி வந்தான் அந்தோனியோ. ஒரு சமயம் பசானியோ போர்சியா என்னும் நங்கையை மணம் புரிதல் வேண்டி, அந்தோனியோவிடம் பெருந்தொகையை உதவியாகக் கேட்டான். அவன் கேட்ட பெருந்தொகை அப்போது தன்வசம் இல்லாததால், அந்தோனியோ தனது கப்பல்களை ஈடாக வைத்துச் சைலக்கிடம் கடன் கேட்டான்: ஆனால் சைலக்கோ அந்தோனியோவைப்பழி தீர்க்கும் எண்ணத்துடன், 'குறிப்பிட்ட கெடுவிற்குள் கடன் தொகையை அந்தோனியோ திருப்பாவிட்டால் அவன் உடலில் இருந்து, சைலக் விரும்பும் எந்த இடத்திலிருந்தும் ஒரு பவுண்டு சதையை ஈடாக எடுத்துக் கொள்ளலாம்' (The Merchant of Venice-Introduction Pages 34-38-Cambridge University Press.) என்று ஒப்பந்தம் எழுதித் தருவதாக இருந்தால் கடன் கொடுக்க இயலும் என்று சைலக் கூறினான்.

குறிப்பிட்ட கெடுவிற்குள் தொகையைத் திருப்ப இயலாத காரணத்தினால் அந்தோனியோ சிறையில் அடைக்கப்படுகிறான். செய்தியறிந்த பசானியோ தொகையைத் திரட்டிக் கொண்டு நண்பனைக் காக்க விரைந்தான்: ஆனால் கல்மனம் கொண்ட

(32-ம் பக்கம் பார்க்க)

# ⋆ நல்வாழ்வு எங்கே? எப்படி? ⋆

எல்லாப் பிறப்பிலும் மனித பிறப்பு உயர்ந்தது என்பர். அப்பிறப் பில் மனிதன் படுகின்ற பாட்டைத் தற்காலத்தில் எண்ணிப்பார்க்க, மனி தனுக ஏன் பிறந்தோம் என்று அல் லும் பகலும் நினைந்து உருகும் நாளாகவே நிற்கிறது. மனிதனு டைய வாழ்நாட்களை "ஶதாயுர்வை புருஷ:" என்று வேதங்களில் நூறு ஆண்டுகள் என்றும், அதில் "அத்யுத் கடை: புண்யபாபை ரிஹைவ பல மச்சநுதே:" என்பதாக தான் செய்த புண்ய பாபங்களை இப்பிறவி யிலேயே அனுபவிக்கிறன் என்றும் வேதம் சொல்லிக் காட்டுகிறது. இப்படிப்பட்ட வாழ்க்கை நிலையை,

"வேதநூல் பிராயம் நூறு
மனிசர்தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப் போகும்
நின்றதில் பதினையாண்டு
பேதை, பாலகன் அதாகும்
பிணி, பசி, மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன்
அரங்கமா நகருளானே!"

*திருமாலை-3*

என்பதாகத் தொண்டரடிப்பொடி ஆழ்வார் 'மனிதனுடையஆயுட்காலம் நூறு ஆண்டுகள் என்றும் அதில் ஐம்பது ஆண்டுகள் உறக்கத்தில் கழிந்து விடுகின்றன. மீதியில் பதி னைந்தாண்டுகள் குழந்தைப் பருவமும் அறியாத பேதைப் பருவமுமாகக் கழிகிறது. உறக்கத்திலும் அறியாப் பருவத்திலும் கழிந்த நாட்கள் போக நல்வாழ்விற்காக எஞ்சிய நாட்களைப் பயன்படுத்துவோம் என்றால் அதி லும் பல இன்னல்கள். என்னே அது. ஒரு பக்கம் பசிக் கொடுமை; மறுப்பக்கம் நோய் வறுத்துகிறது. இதையும் கடந்தால் வயதான மூப்பு நிலை. எல்லாவற்றையும் தாண்டி னால் துன்ப நிலை உண்டாகிறது. எங்கே எப்படி நல்வாழ்வு வாழ்வது? ஆகவே எனக்கு இப்பிறவியே வேண் டாம் அரங்கமா நகருளானே!' என்று கதறுகிறார்.

நல்வாழ்வு வாழ மனிதன் அடி யெடுத்து.வைக்கிறன் அவனை மூன்று சக்திகள் தடுக்கின்றன. அவை என்ன? அவற்றிலிருந்து எவ்வாறு விடுபடுவது? என்பதை முறையே காண்போம். தடுக்கும் மூன்று சக்தி கள்,

"ஒருபொருளும் காட்டாது இருள்
உருவம் காட்டும்
இருபொருளும் காட்டாது இது"

*(திருவருட் பயன்)*

---

**திரு. கல்யாணராமன்,**
**B. Lit., D. I. T.**
**தேரழுந்தூர்**

---

கடுமையான இருளானது ஒரு பொரு ளையும் காட்டாது. ஆனல் இருள் என்கிற ஒரு கடுமையான உருவத் தைக் காட்டும். நம் வாழ்வில் நம்மை இருட்டறையில் தள்ளுகின்ற இரு ளான ஆணவம், கன்மம், மாயை என்கிற இருளானது தன்னையும் காட்டாது. ஒரு பொருளையும் காட்ட விடாது. அவ்விருளே நம்மைச்சுற்றிக் கொண்டு நல்வாழ்வைக்கெடுக்கிறது.

"இருள் இன்றேல் துன்பெண்,
உயிரியல் போக்கும்
பொருள் உண்டேல் என்றுகப்போம்"

*(திருவருட் பயன்)*

அவ்விருள் இல்லையெனில் துன்பமே இல்லை. அது உயிரின் இயல்பு எனில் அதனைப் போக்கும் பொருள் உண் டெனில் அதோடு ஆன்மாவும் செல் லுமாக! இவ்விருள் அழிய நல்வாழ்வு மலரும்.

"பாலாழி மீன்ஆளுங் பான்மைத்
தருள் உயிர்கள்
மாலாழி ஆளும் மறித்து"

*(திருவருட் பயன்)*

பாற்கடலில் வாழும் மீன்கள் பாலை உண்ணுது பிறப்பொருளை விரும்பு வதுபோல அருளிடமாக வாழும் ஆன்மாக்கள் அருளை அடைந்து இன்புறுமல் மயக்கமாகிய பிறவிச் சாகரத்திலே விழுந்து புலன் வழித் திரிந்து நிற்கிறது. அவ்வாறு நின்று உழலும் மானிடச் சரீரம் ஒவ்வொரு செயலையும் தான் செய்ததாகவும், தன்னுல் வந்ததாகவும் நினைக்கிறது. அதன் காரணமாய நிலையை உண ராததை,

"தரையை அறியாது தாமே திரிவோர்
புரையை உணரார் புவி"

*(திருவருட் பயன்)*

என்பதாக தம்மைத் தாங்கி நிற்பது நிலம் என்பதனை நினையாமல் தாமே வாழ்க்கையில் திளைத்து நிற்பர். உயிர்கள் திருவருளால் எல்லாவற் றையும் பெற்று நின்றும் அவற்றைத் தருவது திருவருள் என்பதை உணர்வ தில்லை. எல்லாச் செயலும் இறைவ னுல் நடத்தப்பட்டு நடக்கிறது என்ற உணர்வை அடையாதவனுக நிற்கி றன். அவன் நிலையை,

"வெள்ளத்துள் நாவற்றி எங்கும்
விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்"

*(திருவருட் பயன்)*

வெள்ளத்தின் நடுவில் சிக்கிய ஒருவ னுக்குத் தாகமாக இருப்பினும் அத் தண்ணீர் பயன்படாதவாறு போல எல்லாவிடத்திலும் திருவருள் நிற்க

# விநாயகர்

கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது முதுமொழி. எந்தக் கோயில் இருந்தாலும், இல்லாவிட்டாலும் பிள்ளையார் கோயில் இல்லாத ஊரோ, சிற்றூரோ இருக்க முடியாது. அது மட்டுமா? பிள்ளையார் மாடம் இல்லாத வீடே கிடையாது என்று கூடச் சொல்லலாம். அந்த அளவுக்குப் பிள்ளையார் நம் நாட்டில் கண்கண்ட தெய்வமாக இருக்கிறார்.

பிள்ளையார் வழிபாட்டிற்கு ஏற்ற நாள் வெள்ளிக்கிழமை. முக்கியமாக ஆவணி மாத வளர்பிறை நாளில் வரும் சதுர்த்திதான் ''பிள்ளையார் சதுர்த்தி'' ஆகும். இது நாடெங்கும் கொண்டாடப் படுகின்றது.

**பிள்ளையார் சுழி :**

எதையும் எழுதத் துவங்குவோர் தாம் மேற்கொள்ளும் செயல் செம்மையாக முடிய வேண்டும் என்பதற்குப் பிள்ளையாரின் துணை வேண்டி இச் சுழியினைப் போடுகிறார்கள். பிள்ளையாரின் வடிவம் ஓங்கார வடிவம், அந்த ஓங்கார எழுத்து மருவி பிள்ளையார் சுழி யாறிற்று என்பர் சிலர்.

**விநாயகர் :**

விநாயகர் என்ற சொல்லுக்குச் "சிறந்த தலைவர்'' என்பது பொருள். 'வி' என்றால் சிறப்பு. 'நாயகர்' என்றால் தலைவர் என்பது பொருள். இவ்விரண்டும் சேர்ந்து 'விநாயகர்' ஆயிற்று.

**விநாயகருக்குப் பிடித்தமான பண்டங்கள் :**

மோதகம், அப்பம், அவல், பொரி, கடலை, கரும்பு, மா-பலா-வாழைப்பழங்கள், நாவற் பழம், விளாம் பழம், தேங்காய், இளநீர், அவரை, துவரை, சுண்டல், சுழியம். பிட்டு, பொங்கல், எள்ளுருண்டை, வடை, பாயசம், அப்பளம், தேன், கற்கண்டு, பாதாம், சர்க்கரை, தினைமாவு, பால், பாகு முதலியன.

**விநாயகரை வழிபடும் நாடுகள் :**

விநாயகர் நம் நாட்டிற்கு மட்டும் உரிய கடவுளல்லர். இந்த உலகற்கே உரிய கடவுளாவார். விநாயகர் வழிபாடு வெவ்வேறு பெயர்களில், உருவங்களில் இந்தியத் துணை கண்டத்திலும், சாவகம், பாலி, போர்னியோ, திபெத், பர்மா, சயாம், சீனா, ஜப்பான், இந்தோசீனா, மற்றும் தமிழர் வாழும் அயல் நாடுகளிலும் விநாயகருக்குக் கோயில்களும், வழிபாடுகளும் உள்ளன.

| | | |
|---|---|---|
| சீனாவில் | விநாயகருக்குப் பெயர் : | க்வான்ஷிடியிக் |
| ஜப்பானில் | ,, ,, : | விநாயக்ஷா, க்வான் ஷன்-ஷேர். |
| பர்மாவில் | ,, ,, : | மகாபிணி, |
| கம்போடியாவில் | ,, ,, : | ப்ராகணேஷ் |
| மங்கோலியாவில் | ,, ,, : | தோத்கர்-அவுன்-காகாள். |

சீனாவில் யானை முகக் கடவுள் திருவுருவம் வடிக்கப்பட்டது 6-வது நூற்றாண்டில்.

ஜப்பானில் 'இடர் களையும் பிள்ளையார்' வழிபாட்டை 9-ம் நூற்றாண்டில் துவக்கியவர் ''கோபா தெய்சி'' என்பவராவார்.

தொகுத்தவர் : கிரனூர் திருவெங்கடராம நரசிம்மன்-மைசூர்.

அதனை அறியாது இந்திரியங்களோடு சிக்கித் தவிக்கிறான். இதைக்

''கோவாய் ஐவரென் மெய்குடி யேறிக்
'கூறை சோறிவை தா' என்று
குமைத்துப்
போகார், நான் அவரைப்
பொறுக்ககிலேன்
புனிதா! புட்கொடியாய்!
நெடுமாலே,
தீவாய் நாகணையில் துயில் வானே!
திருமாலே! இனிச்
செய்வதொன்றறியேன்
ஆவா! வென்ற டியேற்கு இறை
யிரங்காய்
அழுந்தூர் மேல்திசை நின்றவம்
மானே !''

*பெரிய திருமொழி 7-8-9*

என்கிற திருப்பாடலில் 'ஐம்பொறி அரசனை நின்று என்னை நல்வழியிலிருந்து அகற்றி, கூறை, சோறு இவை தா! வென்று எமை வறுத்துகின்றன. என்னால் பொறுக்க முடியவில்லையே! புனிதமானவனே! புட்கொடியை உடையவனே! நெடுமாலே! நாகணையில் துயின்றவனே! அடியேனை ஆட்கொண்டு திருவாய் மலர்ந்தருளி'வா' வென்று அழைக்க அழுந்தூர் பெருமானே எனக்கு அருள் செய்வாயாக!' என்று புலம்புகிறார்.

நல்வழியிலிருந்து திருப்பிச் செலுத்தும் ஐம்புலன்களும், ஆணவம், கன்மம், மாயை என்ற இருளில் அகப்பட்டதுமான இவ்வான்மாவிற்கு, தித்திக்கும் சுவையான பாலானது நாவில் பித்தம் மேலிட்ட போது கசப்பதுபோல் வாழ்வில் கசப்புத் தன்மையை உண்டாக்குகிறது.

'' தித்திக்கும் பால்தானும்
கைக்கும் திருந்திடும் நாப்
பித்தத்தில் தான் தவிர்ந்த பின் ''
*(திருவருட் பயன்)*

பித்தம் தவிர்ந்த பின் சுவையான பாலானது தித்திப்பது போல இவ்விருள் நீங்கிடவிடத்து ஆன்மா இறையனுபவித்தில் திளைத்துநிற்கும். வாழ்வில் மலர்ச்சியை உண்டுபண்ணும்.

" தூநிழலார் தன்காரும்
சொல்லார் தொகுமிதுபோல்
தான் அதுவாய் நிற்கும் தரம் "
*(திருவருட் பயன்)*

கொடுமையான வெப்பத்தில் வருபவனுக்கு குளிர்ந்த நிழல் இருக்க, அங்கே தங்குவதற்கு ஒருவரும் சொல்ல வேண்டியதில்லை. அதுபோல் பெருமானுடைய அருள் பெறுகிற பக்குவநிலையில் நல்வாழ்வு கிடைக்கிறது.

வாழ்வில் இருமகளிர் கூடினால் அவர்களுக்கு இன்பம் கிடைப்பதில்லை. ஒருவனும் ஒருத்தியும் கூடினவிடத்து அளவிலாத இன்பம் கிடைப்பது போல இறையருளும், ஆன்மாவும் கூடினவிடத்து நல்வாழ்வின் பயனான பேரின்பம் கிடைக்கிறது. இதையே,

" இருவர் மடந்தையருக்கு என்பயன்
இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி உறின் "
*(திருவருட் பயன்)*

ஒருவனும் ஒருத்தியும் கூடியின்புறும் இன்பம் போல நல்வாழ்வில் பேரின்பத்தைப் பெற இருள் அகல அருட்பேறு பெற எல்லோரும் வழிபடுதலை

" வினைவல்லிருள் என்னும்,-
முனைகள் வெருவிப்போம்
சுனைநன் மலரிட்டு,-
நினைமின் நெடியானே ! "
*திருவாய்மொழி*

என்ற ஆழ்வார் திருமொழி நன்நெறியைச் சொல்லிக் காட்டுகிறது. இவ்வினையும், இருளும் அகல வாழ்த்தி வழிபடும் இறைவன் எப்படிப்பட்டவன்? எவ்வுருவினை உடையவன்? அவனுக்கு என்ன பெயர்? எந்த நிறத்தைக் கொண்டவன் என்பதை விளக்க பொய்கையாழ்வார் முற்பட்டு நமக்கு அவன்,

" தமருகந்தது எவ்வுருவம்
அவ்வுருவம் தானே,
தமருகந்தது எப்பேர்மற்று
அப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாது
இருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும் "
—*முதற்றிருவந்தாதி 44*

அவரவரும் நமக்கு விரும்பின உருவத்தையும், பெயரையும் வண்ணத்தையும் கொடுத்து 'இறைவன்' என்று கொண்டால் அவன் ஏற்று அருள்புரிவான் என்றும் அவனை எவ்வாறு வழிபடுதல் வேண்டும் என்று,

" அவரவர் தாம்தாம் அறிந்தவாறு
ஏத்தி
இவர்இவர் எம்பெருமான் என்று
—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர்,
உலகளந்த
மூர்த்தி யுருவே முதல் "
—*முதற் திருவந்தாதி 14*

அவரவரும் தமதமக்கு அறிந்த தோத்திரங்களையும், அறிந்த முறையையும் கொண்டு வாழ்த்தி வழிபட்டால் அவன் ஏற்று மகிழ்வான் என்பதைச் சொல்லிக் காட்டிய ஆழ்வார் வைணவம், சைவம் என்று பாகுபட்டு இருப்பதால் அதில் உயர்வு தாழ்வு என்று சொல்லிக் கொண்டு மனிதனே! நீ வாழ்த்தி வழிபடும் வழிபாட்டை குறைத்து விடாதே. அதனால் நல்வாழ்வின் இன்பநிலை குன்றி பல இன்னல்களுக்குள்ளவாய். மண்ணில் நல்ல வண்ணம் வாழ வாழ்த்தி வழிபடும் பெருமான் திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு இரண்டும் ஒன்றே என்று குறிப்பிடுவதில்,

" தாழ்சடையும், நீண்முடியும்,
ஒண்மழுவும், சக்கரமும்,
சூழ் அரவும், பொன்னாணும்,
தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல்
எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து "
*மூன்றாம் திருவந்தாதி 63*

*(அடுத்தப் பக்கம் பார்க்க)*

# கண்ணும் கருத்தும்

இராமதாசர் இராமாயணம் எழுதினார். எழுதியதைத்தனது சீடர்களுக்குப் படித்து விளக்கிக் கொண்டிருந்தார். அனுமாரும் நாள் தோறும் அதைக் கேட்க யாருக்கும் தெரியாமல் வந்து உட்காருவார். இராமதாசர், "அனுமார் அசோவனத்தை அடைந்தார். அங்கு வெள்ளை மலர்களைக் கண்டார்" என்று எழுதியிருந்தார். இதைக் கேட்டதும் அங்கே அனுமார் உடனே தோன்றினார். "நான் அசோகவனத்தில் வெள்ளை மலர்களைப் பார்க்கவில்லை. நான் பார்த்தது சிவப்பு மலர்கள். நீர் எழுதியிருப்பது பிழை. அதைத் திருத்துங்கள்" என்று இராமதாசரிடம் சொன்னார். ஆனால் இராமதாசர், "நான் எழுதியிருப்பது சரியே, நீங்கள் வெள்ளை மலர்களைத் தான் பார்த்தீர்கள்" என்றார். அனுமார், "போனவன் நான்! அப்படியிருக்க நான் சொல்லுவது பொய்யா?" என்று கேட்டார். கடைசியில் இந்தவழக்கு இராமரிடம் போயிற்று. அவர் தீர்ப்பு சொன்னார். "பூக்கள் வெள்ளையே! ஆனால் அனுமானது கண்கள் கோபத்தால் சிவந்திருந்தமையால் அவை அவருக்குச் சிவப்பாய்த் தோன்றின" என விளக்கமும் தந்தார். நாம் உலகை எந்நோக்கில் பார்க்கிறோமோ அப்படியே அது நமக்குத் தோன்றும் என்பதே இதன்கருத்து.

— தேனி முருகேசன்.

ஆதாரம் : வினோபாவின் குட்டிக் கதை.

# ★ திருக்கேட்டை ★

திரு. ஏ ராகவய்யலோசியர்,
திருவள்ளூர்.

27 நட்சத்திரங்களில் 18ஆவது ஆக அமைந்துள்ள கேட்டை நட்சத்திரம் திருமகளுக்கு உகந்ததாக இருப்பதால் இதனை திருக்கேட்டை என வழங்குகிறோம். இவ் விண் மீனின் நாம எழுத்துக்கள் நோ-யா-யி-யு. ஆகும். இந்நட்சத்திரத்தின் 14 நாழிகைக்கு மேல் பிறந்தவர்கள் வாழ்க்கையில் விஷ பரீட்சைகள் உண்டாகும். இதில் பிறந்தவர்கள் சிகப்பு நிறம், பருத்த சரீரம், வட்டமான முகம், இவற்றுடன் ராட்சத கணத்தை பெற்றவராவார். இந் நட்சத்திரத்திற்கு உரிய தேவதை இந்திரன்.

இதில் பிறந்தவர்கள் கபட மனம் படைத்தவர்களாயும், தேசாதிகாரம் பெற்று காலம் கடந்த சந்தான பிராப்தி பெற்று, வாழ்நாளில் மனைவி சம்பந்தப்பட்டத் துயரத்தை அடைபவர்களாக விளங்குவர். உடன் பிறந்தவர்களால் சுகம் இல்லாதவர்கள். பெரும்பாலும் தார்மீக குணம் பெற்று, புண்ணிய காரியங்களில் ஈடுபடும் தன்மை உள்ளவர்கள். பரோபகாரம், எளியவர்பால் பக்தி உள்ளவர்கள்.

இந் நட்சத்திரத்தில் ஜனித்தவர்கள் விருச்சிக ராசியைக் கொண்டவர். வயிற்றில் திலகம் போன்ற மச்சம் அமையப் பெற்றவர். இவர்கள் அதிகமான காரம், பூசிணிக்காய், அகத்திக் கீரை, வேர்க்கடலை ஆகியவற்றை அதிகமாக விரும்பி உண்பவர். செல்வந்தர்களாக திகழ்வர். இரண்யன் வயிற்றில் பிரகல்லாதனைப் போன்று இந் நட்சத்திரத்தை உடையவர்களுடைய சந்ததிகள் இவர்களுக்கு எதிரிகளாவர்.

இவர்கள் தெற்கு, மேற்கு திசை பயணங்களால் அனுகூலம் அடைவர். இவர்களில் சிலர் உத்தி யோகத் துறையிலும் சிலர் வைதிக காரியங்களிலும் ஈடுபட்டிருப்பார்கள். இவர்களுக்கு அனுகூலமான தேதிகள் 3, 6, 12, 15, 21, 24, 30 ஆகியவையாகும். இந் நாட்களில் ஈடுபடும் காரியங்கள் அனுகூலமாகவும், நன்மையாகவும் முடியும்.

இந் நட்சத்திரத்திற்குரிய நான்கு பாதங்களில் ஓராவது பாதாம்சத்திற்கு குரு அதிபதி. துன்பம் என்பதைப் பற்றி ஓராவது பாதத்தில் பிறந்தவர்கள் அறியாதவர்கள். எப்பொழுதும் எழுதும் தன்மையுடையவர். கர்வம், ஹாஸ்யம் முதலிய குணங்களைப் பெற்றவர்.

இரண்டாவது பாதாம்சமானால் சனி அதிபதி. உக்ரம் உள்ளவர். சதா வசீகரம் உள்ளவர்கள். எப்போதும் நோயுற்றவர்களாக இருப்பார்கள்.

மூன்றாவது பாதம் மந்தாம்சம். பிறர் வேலையை தன் வேலையைப் போல் எண்ணிச் செய்பவர்கள்.

நாலாம் பாதம் குரு அம்சம். காது வலி உடையவர்களாக இருப்பார்கள். தர்மத்தை கடைபிடிப்பர். சாஸ்திரங்களை அறிந்தவர்கள். தேவதா பூஜை செய்பவர்கள். இவர்கள் பிறப்பது புதன் தசையில் ஆகும். 3 வயதில் காய்ச்சலாலும், 9ஆம் வயதில் விலங்குகளாலும் அவதிப்பட நேரும். 16ஆவது வயதில் நெருப்பினாலும், 20ஆவது வயதில் அபமிருத்தியு தோஷத்தாலும், 28ல் குன்ம வியாதியாலும், 54ல் அபமிருத்திபு தோஷத்தாலும் பயங்கள் ஏற்படும். இதற்கு தக்க பரிகாரங்கள் செய்து வரின், ஜாதகருக்கு பரம ஆயுள் 80 வயதாகும்.

ஆதாரம் : நட்சத்திர சூடாமணி



---

தாழ்சடையும், நீண்முடியும், ஒப்பற்ற மழுவும் கொண்ட சிவபெருமானும், சக்கரமும், அரவும், பொன்னும் கொண்ட திருமாலும் திருமலைமேல் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு ஒன்றாகவே இசைந்திருக்கிறான் என்றுச் சொல்லிக்காட்டுகிறார். அப்பெருமானை வழிபடுவதில் திருமங்கை ஆழ்வார்,

"எய்ப்பென்னை வந்து நலியும் போதங்கு
ஏதும் நான் உன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக் கிப்போதைக் சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே"

பெரியாழ்வார் திருமொழி 4-10-1

'வயதான மூப்பு நிலையில், பெருமானே உன்னை வாழ்த்தி வழிபட நினைக்கமாட்டேன். அப்போதிக்கு இப்போதே வழிபடுகிறேன். என்னைக் காப்பாயாக' என்று வேண்டுவது போல் நாமனைவரும், வாழ்த்தவாயும், நினைக்க மடநெஞ்சும், தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை, கண்ணாரக் கண்டு, கையாரத்தொழுது, வாழ்த்தி வழிபட்டு, அப்பெருமானுடைய பேரருளைப் பெற்று நல்வாழ்வைப் பெற்று உய்வோமாக! ★

# குறுக்கெழுத்துப் புதிர்

திரு. பா. முத்துக்குமரன் - காட்டுக்கோட்டை.




| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ச | | 2 கு | X | 3 து | | 4 சி | X | 5 த |
| | X | | 6 து | | | | X | |
| | 7 கு | | | | | 8 க | | |
| | | 9 கு | | | 10 ல | | 11 ச | X |
| | | X | 12 பு | | | | | 13 பா |
| X | 14 சி | 15 வ | | 16 வே | 17 கு | | | |
| 18 கு | | | X | | | X | | |
| | | | 19 அ | | | | | |
| | 20 பு | | | X | 21 து | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. திருமாலின் கையில் இந்தச் சக்ரம் உள்ளது;
3. பெண்கள் அவசியம் செய்ய வேண்டிய பூஜை
7. சுமங்கலி பெண்ணின் நெற்றியில் இது இருக்க வேண்டும்.
8. சிவனின் தலையின் மீது இவள் இருக்கிறுள்.
9. திருச்சிக்கு அருகில் திருமால் குடிகொண்டிருக்கும் ஊர்.
12. கண்ணுக்கு மேல் இது உள்ளது.
14. நஞ்சுண்டவர் இவர்.
17. மண்பாண்டம் செய்பவர் இவர்.
19. கம்பரின் மகன்.
20. வாரத்தின் மூன்ருவது நாள்.
21. இவன் பெயரில் நட்சத்திரம் உள்ளது.

### மேலிருந்து கீழ்

1. திருமலையிலிருந்து வரும் சமய மாத இதழ்......
2. இலங்கைக்கு பாலம் அமைக்க இவை ராமருக்கு மிக உதவின.
4. இது காட்டுக்கு ராஜா...
5. இராவணனுக்கு சூர்ப்பணகை இந்த உறவு...
7. 12 ஆண்டுக்கு ஒரு முறை மலரும் பூ...
10. இராமரின் இரு மைந்தர்கள் இவர்கள்
11. முருகனின் ஆறெழுத்து மந்திரம் இது
13. சிவனின் மனைவி பெயர் இது.
14. சிலப்பதிகாரம் இதன் காரணமாக பிறந்தது?
15. முருகன் மணந்த மூன்றெழுத்துக் குறமகள்
16. இவை நான்கு வகைப்படும்.
18. இராமாயணத்தில் இராமருக்கு உதவும் படகோட்டி

# வினா - விடை

1. பகவான் கிருஷ்ணர் அவதரித்த இடம் எது?
2. இறைவனுக்கு கண் தந்தவர் என புகழப்படுபவர் யார்?
3. பாரதத்தில் அடங்கியுள்ள கண்ணபிரானால் அருச்சுனனுக்குச் சொல்லப்பட்ட உயரிய வேத நூல் எது?
4. செய்நன்றிக்கு உதாரணமாய் இராமாயணம்,மகாபாரதம் இவற்றில் வருபவர்கள் யார்?
5. தந்தைக்கே உபதேசம் செய்தவர் என போற்றப்படும் தெய்வம் எது?
6. கிருஷ்ணவதாரம் எந்த யுகத்தில் ஏற்பட்டது.
7. கஜேந்திரன் என்னும் யானையின் துன்பத்தைப் போக்க ஓடி வந்தவர் யார்?
8. பெருமாள் ஆலயத்தில் சொர்க்க வாசல் திறக்கப்படும் நாள் என்று? (விடைகளுக்கு 24ம் பக்கம் பார்க்க)

#  சிந்தனைச் சோலை! 

ஒரு நீர் நிரம்பிய குளத்தில் பல தாமரை மலர்கள் பூத்திருந்தன. நீர் பளிங்கு போல பளபளத்துக் கொண்டிருந்தது. அந்தக் குளத்தின் வட கரையில் வரிசையாய் மூன்று பிள்ளையார் கோவில்கள் இருந்தன. அதில் இருந்த விநாயகர் மிகுந்த சக்தியும் மஹிமையும் நிரம்பப் பெற்றவர். பொதுவாகவே எந்த ஒரு காரியத்தைத் துவங்கும் போதும் பிள்ளையாரை மனதில் துதித்துத் துவக்கப்படும் காரியம் அவரருள் கொண்டு இடையூறின்றி முடிவடைய முதலில் பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பிப்பதுதான் முறை.

பிள்ளையார் சுழி போட்டுத் துவக்கப்படும் காரியங்கள் அந்த விக்ந விநாயகன் அருளால் தடங்கல் இன்றி சுபமாய் நிறைவு பெறும் என்ற நம்பிக்கை எல்லா ஹிந்துக்களிடமும் உண்டு. இவருக்கு மட்டும் சமய வேறுபாடே கிடையாது. சைவரும் வைணவரும், மாத்வரும் இவருக்கே முதலிடம் கொடுத்துள்ளனர். பிள்ளையாரின் பெருமைகளை விளக்க ஆரம்பித்தால் அதற்கு ஒரு புத்தகம் போதாது. ஆகையால் நாம் குறிப்பிட்ட குளக்கரையில் உள்ள பிள்ளையாரைப் பற்றித் தற்சமயம் நோக்குவோம்.

இந்த மூன்று பிள்ளையார் கோயில்களையும் ஓர் அந்தணர் பார்த்து வந்தார். தினந்தோறும் அதிகாலையில் அவர் குளத்தில் நீராடி புனிதராய் அந்தக் குளத்தில் மலர்ந்திருக்கும் தாமரை மலர்களில் சிலவற்றைப் பறித்துக்கொண்டு, ஸ்தோத்ர பாராயணம் செய்தபடி பிள்ளையார் கோவிலுக்குச் செல்வார். முதல் கோவிலினுள் அவர் நுழைந்த உடன், அங்குள்ள விநாயகரின் மஹிமையால் அவர் கைக் கொணர்ந்த தாமரை மலர்கள் இரு மடங்காகப் பெருகிவிடும்.

அவற்றில் சில மலர்களை விநாயகருக்குச் சமர்ப்பித்து, பூசித்த பிறகு மீதி மலர்களுடன் அடுத்த கோயிலுக்குச் செல்வார்.

முன் போலவே இந்தக் கோயிலுக்குள் நுழையும் போதும் அவர் கையிலுள்ள தாமரை மலர்கள் அந்த விநாயகர் மஹிமையால் இரு மடங்காகிவிடும்.

திரு. S. சந்திரமௌலி-திருப்பதி.

பூசாரியும் முதல் கோயில் விநாயகருக்கு எத்தனை மலர்கள் சாற்றினாரோ அவ்வளவே இந்தக் கோயிலுக்கும் சாற்றிப்பூசித்து மிகுதி மலர்களுடன் அடுத்தக் கோயிலுக்கு வருவார். அந்தக் கோயிலிலுள்ள விநாயகர் மஹிமையாலும் பூசாரியின் கையிலிருக்கும் தாமரை மலர்கள் இரு மடங்காகப் பெருகிவிடும். அவர் அந்த மலர்கள் அனைத்தையும் அந்த மூன்றாவது கோயிலில் இருக்கும் விநாயகருக்குச் சாற்றி பூசித்துத் திரும்புவார். அவரால் போடப்பட்ட மலர்கள் மூன்று கோயில்களிலும் ஏற்றத் தாழ்வின்றி ஒரே எண்ணிக்கையுடன் இருக்கும். பூசை முடிந்து மூன்றாவது கோயிலை விட்டு வெளியேறும்போது, அவர் கையில் மிகுதி தாமரை மலர்களேதும் இருக்காதென்றால் அந்த பூசாரி குளத்திலிருந்து எத்தனை தாமரை மலர்கள் பறித்திருப்பார்? ஒவ்வொரு கோயிலிலும் எவ்வளவு மலர்கள் சாற்றியிருப்பார்?

விடை கண்டு பிடித்து விநாயகரின் அருளைப் பெற முயலுங்கள்.



**குறுக்கெழுத்துப் புதிர் விடைகள்**

| மேலிருந்து கீழ். | | | | இடமிருந்து வலம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | ஸப்தகிரி | 2. | குரங்கு | 1. | சங்கு | 3. | துளசி |
| 4. | சிங்கம் | 5. | தங்கை | 6. | தும்பி | 7. | குங்குமம் |
| 7. | குறிஞ்சி | 10. | லவகுசா | 8. | கங்கை | 9. | குணசீலம் |
| 11. | சரவணபவ | 13. | பார்வதி | 12. | புருவம் | 14. | சிவன் |
| 14. | சிலம்பு | 15. | வள்ளி | 17. | குபேர் | 20. | புதன் |
| 16. | வேதம் | 18. | குகன் | 21. | துருவன் | | |

**வினா-விடை விடைகள் :**

1. மதுரா, 2. கண்ணப்ப நாயனர், 3. பகவத் கீதை,
4. இராமயணம்–கும்பகர்ணன், மகாபாரதம்–கர்ணன், 5. முருகன்,
6. துவாபரயுகம், 7. திருமால், 8. வைகுண்ட ஏகாதசி.

விடை :

பறித்தப் பூக்கள்—7:

ஒவ்வொரு கோயிலிலும் சாற்றியது-8.

# ப்ராணாயாமம்

ப்ராணன் என்பது அண்ட சரா சரங்களின் சக்தி விளக்கு. ப்ராணன் நமக்கு உணவு, நீர், காற்று, சூரியன் மூலம் கிடைக்கின்றது. நரம்பு மண்டலங்களின் மூலம் பிராணன் உட்கிரகித்துக் கொள்ளப்படுகிறது. நமது தேவைக்கு வேண்டியது போக எஞ்சிய பிராணன் மூளையிலும், நரம்பு மையங்களிலும் சேர்த்து வைக்கப்படுகிறது. ப்ராணாயாமத்தை முறையாகச் செய்வதன் மூலம் ஏராளமான ப்ராண சக்தியைச் சேர்த்து வைக்கலாம்.

'ப்ராணன்' என்பது தேக வாயு. 'ஆயாமம்' என்பது அதைத் தடைப் படுத்துவது. உடலின் பிராண சக்தியையும் ஆதார சக்திகளையும் முறையாகக் கட்டுப்படுத்துவதே ப்ராணாயாமம் ஆகும். ப்ராணாயாமம் செய்வதன் நோக்கமே ப்ராணனை முறையாகக் கட்டுப்படுத்துவதே. முறையாகவும், ஒழுங்காகவும் மூச்சு விடுவதிலிருந்தே ப்ராணாயாமம் ஆரம்பிக்கிறது. வாழ்க்கையில் ஒரு கட்டுப்பாடு உண்டாகும். சாதாரண மக்கள் மூச்சு விடுவது முறைப்படி அமைந்திருக்காது. ப்ராணாயாமத்தை இடைவிடாமல் பயிற்சி செய்வதன் மூலம் எப்போதும் சரியாக மூச்சுவிடும் பழக்கத்தை உண்டாக்கிக் கொள்ளலாம்.

'ப்ராணாயாமம்' என்ற செல்லுக்கு கணக்கு வழக்கு இல்லாமல் உள்ளும் புறமும் போய் வந்து கொண்டிருக்கும் மூச்சுக் காற்றை நிதானமாக நிறுத்தி அமைதியாக வெளியில் விடுதல் என்று பொருள். இந்தக் காரியத்தை மூன்று விதமாகப் பிரித்தார்கள். அதாவது:-

பூரகம்—ஒரு மூக்கை மூடி மற்றொரு மூக்கால் காற்றை உள்ளுக்கு இழுப்பது.

கும்பகம்—அப்படி இழுத்த காற்றை இரண்டு மூக்குகளையும் அழுத்தி உள்ளேயே சற்று நேரம் நிறுத்துவது.

ரேசகம்—காற்றை உள்ளே இழுத்த மூக்காலல்லாமல் மற்றொரு மூக்கால் காற்றை மெதுவாக வெளியில் விடுவது.

ப்ராணாயாமம் செய்யும் பொழுது கவனிக்க வேண்டியது என்னவென்றால் ப்ராணாயாமத்தைச் செய்யும் அறை நல்ல காற்றோட்ட முள்ளதாயும், ஈர மற்றதாகவும் இருக்க வேண்டும். பனியும், குளிருமற்றக் காலங்களில் ஏரிக்கரையிலும், நதிக் கரைகளிலும், தோட்டத்திலும் திறந்த வெளியிலும்,மலையுச்சியிலும், மலையடி வராத்திலும் பயிலலாம். சத்தியத்தில் மனதைப் பதித்துத் தினந்தோறும் ப்ராணாயாமத்தைச் செய்ய வேண்டும். பிராணன் தானுகவே முடிவில் ஒரே சீராக அமையும். இப்ப்ராணாயாமத்தைசெய்யும்போது உடலை வருத்தி அதிக முயற்சி செய்ய வேண்டாம். செய்யும்போது மன நிறையும், மகிழ்ச்சியும் கொள்ள வேண்டும். மிகவும் மெதுவாகவே மூச்சை உள்ளிழுக்க வேண்டும். மூச்சு விடும்போது ஓசை வரக்கூடாது. மந்தமாக அல்லது மனக்கஷ்டத்துடன் அல்லது தளர்ச்சியுடன் இருக்கும் போதும் ப்ராணாயாமத்தைப் பயிற்சி செய்தால் மன நிம்மதி யுண்டாகும். மௌனியாய் இரு கண்களையும் மூடிக்கொண்டு ப்ராண வாயுவை அடக்கி இருதயத்தில் ஆத்ம ஸ்வருபத்தை தியானித்துச் செய்ய வேண்டியது. ஆள்காட்டி விரலும், நடு விரலும் மூக்கில் ஸ்பர்சிக்கக் கூடாது.

திரு. S. சுப்பிரமணி - பெங்களூர்.

பத்மாசனத்திலோ அல்லது சித்தாசனத்திலோ உட்கார். வலது மூக்குத் துவாரத்தை வலது கைக்கட்டை விரலால் மூடிக்கொள். இடது மூக்குத் துவாரத்தால் மெதுவாகக் காற்றை உள்ளிழு. பிறகு இடது மூக்குத் துவாரத்தையும் மோதிர விரல் சிறு விரல்களால் மூடிக்கொள். மூச்சை அப்படியே அடக்கு. முடிந்த வரையில் அடக்கிக் கொண்டால் போதும். கஷ்டப்பட்டு அடக்க வேண்டாம். பிறகு வலக்கை கட்டை விரலை எடுத்து விட்டு மிகமிக மெதுவாக வலது மூக்கின் துவாரத்தின் வழியாக காற்றை வெளிவிடு. பிறகு முன் போலவே வலது மூக்கின் துவாரத்தின் வழியாகக்காற்றை உள்ளிழு. சற்று நேரம் அடக்கிக் கொண்டிரு; பிறகு இடது மூக்குத் துவாரத்தை அடைத்துக் கொண்டிருக்கும் விரல்களை எடுத்துவிட்டு அதன் வழியாகக் காற்றை வெளிவிடு. காற்றை வெளி விடும்போது மிகமிக நிதானமாக

## கவனத்திற்கு. . . .

திருமலையானின் பெருமையைப் பற்றி குறைந்தபட்சம் 20 நபர்களுக்கு கடிதம் எழுத வேண்டும் என்றும், அப்படி எழுதினுல் நன்மை உண்டாகும், இல்லையெனில் கேடு வரும் என்றும், முதல் கடிதம் 'இறைவனிடமிருந்து வந்தது' என்றும் கூறி, பலர் தங்களை ஏமாற்றிக் கொண்டு பிறரையும் தெரிந்தோ தெரியாமலோ ஏமாற்றி அச்சுறுத்தி வருகின்றனர். தயைவு செய்து, இது போன்ற கடிதங்களுக்கோ, 'நோட்டீஸ்'களுக்கோ மதிப்பளிக்காதீர்கள் என்று பொது மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள்.

— ஆர்.

வெளிப்படுத்த வேண்டும். இந்த ஆறுபடிகளும் சேர்ந்து ஒரு ப்ராணு யாமம் ஆகும். இந்தப் பூரக ரேசக கும்பங்கள் 1:3:2 என்ற விகிதத்தில் அமைய வேண்டும். தொடர்ந்து பழகி வந்தால் தானுகவே நன்கு அமையும்.

ப்ராணுயாமத்தை ப்ராணுயாம மந்திரத்துடன் செய்வதால் நாடி சுத்தமடைந்து யோக சக்தி உண்டா கும். பிரம்மசரியத்தைக் காத்துக் குண்டலினி சக்தியை எழுப்பும். என் றென்றும் இளமையோடு இருக்க லாம். ப்ராணனைக் கட்டுப்படுத்த கூடுமாஞல் அண்ட சராசரங்களையும் வசப்படுத்தலாம். மனத்தையும் வசப்படுத்தலாம். மூச்சை, ப்ராணனை வசப்படுத்தியவன் மனதை வசப்படுத் தியவனுவான். மூச்சைச் சற்று அடக்கி வைத்திருப்பதனுல், அது சக்தியையும், பலத்தையும் பெருக்கு கிறது.

மூச்சைக் கட்டுப்படுத்துவதே ப்ராணுயாமத்தின் நோக்கம். ஆனு லும் ப்ராணுயாமம் உடலிலுள்ள பல் வேறு உறுப்புகளுக்குச்சிறந்த பயிற்சி யைக் கொடுக்கிறது. ப்ராணுயாமம் எல்லாவிதமான நோய்களையும் போக்குகிறது. ஆரோக்கியத்தை விருத்தி செய்கிறது. உள் மலங் களைப் போக்குகிறது. நரம்புகளைத் தூண்டுகிறது. திடசித்தத்தை அளிக் கிறது. உணர்ச்சிவசப்படுவதைத் தடுக்கிறது. ப்ராணுயாமத்தை முறையாகச் செய்பவர்கள் நோயற்ற நல்லுடலும், தேககாந்தியும், இனிய குரலும் பெறுவர். அவர்கள் உடல் நறுமணத்துடன்இருக்கும். அவருக்கு நல்ல பசி, மன மகிழ்ச்சி, வலிமை, தைரியம், ஊக்கம், சுறுசுறுப்பு, சக்தி, மன ஒருமைப்பாடு அதிகரிக் கும்.

ப்ராணுயாம முடிவில் ப்ரணவத் தால் வலது காதைத் தொடவேண் டும். புறப்படும் பொழுதும், ஒரு காரியம் தொடங்கும்பொழுதும் வலது நாசியில் காற்று சென்று கொண்டிருந்தால்காரியசித்தியாகும். தூங்கும் பொழுதும் வலநாசி மேலே இருக்கும்படியும் இடதுநாசி கீழ்ப் புறமாயும் இருக்கவேண்டும்.

இத்தகைய ப்ராணுயாமத்தை யாவரும் செய்யலாம்.

---

# ★ முடிவிலொரு பிடி சாம்பல் ★

நிலையாமையைப் பற்றிச் சொல்லாத அற நூல்களே தமிழில் இல்லை எனலாம். வாழ்க்கை நிலையாமை, செல்வம் நிலையாமை ஆகியவற்றைப் பற்றி அற நூல்கள் எடுத்துக் கூறுவதன் நோக்கம், வாழ்க்கையையோ செல்வத்தையோ அறவே வெறுத்து ஒதுக்கி விட வேண்டும் என்பதன்று. வாழ்க்கையும் செல்வமும் நிலையாத தன்மையுடையன என்பதை உணர்ந்து, அவை நமக்குக் கிடைத்திருக்கும் சிறு பொழுதுக்குள் அவற்றைப் பயன்படுத்தி நிலையான ஒன்றை அடைய வேண்டும், பெற வேண்டும் என்பதே ஆகும். மேலும் நிலையாமையைப் பற்றி அறிந்திருப்பின் வாழ்க்கையில் பிரிவோ, செல்வத்தில் மாறுதலோ ஏற்படுகின்ற பொழுது, அதுபற்றி மிகுதியாக வருந்தாமலும் கவலைப்படாமலும் இருக்க முடியும்.

''நெருநல்உளன் ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ்வுலகு''

'நேற்று இருந்த ஒருவன் இன்று இல்லாமல் இறந்து விட்டான் என்று கூறப்படும் நிலையாமையையே பெருமையாக உடையது இந்த உலகம்' என்று சொன்ன திருவள்ளுவர், 'அதனால் இந்த உலகத்தில் வாழ்வதில் பயனே இல்லை' என்று கூறுகிறார்? இல்லை. நா அடங்கி விக்கல் எழுமுன்னே—அதாவது இறப்பு வருமுன்னே நல்ல அறச் செயல்களை எல்லாம் விரைந்து செய்ய வேண்டும்.

''நாச்செற்று விக்குள் மேல்வாரா முன் நல்வினை
மேற்சென்று செய்யப்படும்'' என்று தான் கூறுகிறார்.

''அற்கா இயல்பிற்றுச் செல்வம்''

நிலைக்காத தன்மை உடையது பொருள். எனவே அதனைப் பெருதிர்கள் என்று சொல்லவில்லை திருவள்ளுவர். ''அற்கா இயல்பிற்றுச் செல்வம் அது பெற்றால் அற்குப ஆங்கே செயல்'' 'அத்தன்மையான பொருளைப் பெறுவீர்களேயானால் அப்பொழுதே நிலையான அறச் செயல்களைச் செய்யுங்கள்' என்று தான் சொல்கிறார்.

நாலடியும் இப்படியேதான் சொல்கிறது. ''அகடுற யார் மாட்டும் நில்லாது செல்வம்''. எனவே, ''பகடு நடந்த கூழ் பல்லோரோடுண்க'' ''புல் நுனி மேல் நீர் போல் நிலையாமை''. இதனை எண்ணிப் பார்த்து ''இன்னினியே செய்க அறவினை''. ''முற்றியிருந்த கனியொழித் தீவளியால் நற்காய் உதிர்தலும் உண்டு''. ஆகவே ''மற்றறிவாம் யாம் இளையம் என்னாது கைத்துண்டாம் போழ்தேகரவாது அறஞ் செய்ம்மின்''

பட்டினத்தாரும் இந்த முறையிலேதான் நிலையாமையைப் பற்றி தம்முடைய பாடல்களில் எடுத்துரைக்கிறார்.

''முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்-
ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய் வெந்து மண்ணாவதுங்
கண்டு பின்னுமிந்த
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால்
பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டு
மென்றே அறிவார் இல்லையே''

''முடிதரித்து ஆளும் பேரரசர்களும் அவர் போன்ற மற்றையோருங் கூட ஒரு நாள் இறந்துதான் போகிறார்கள். அவர்களுடைய சடலங்கள் கொளுத்தப்பட்டு வெந்து முடிவிலே ஒரு பிடி சாம்பலாகி மண்ணாகித் தான் போகின்றன. இந்த நிலையாமையைக் கண்டிருந்தும் மக்கள் உலக வாழ்க்கையையே நினைந்து போராடிக் கொண்டிருக்கிறார்களே அல்லாமல், நாம் எல்லோரும் இறைவனுடைய மக்கள் என்பதை உணர்ந்து ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தி நன்னெறியில் வாழ்ந்து இறைநிலையை அடைய வேண்டும் என்று எண்ணி அறியமாட்டேன் என்கிறார்களே!'' என்று இரங்குகிறார் பட்டினத்தார்.

திரு. நீ. தங்கவேலன்-வேலூர்.

''உலகத்தில் மனிதன் பிறக்கின்ற பொழுது பொன்னோடும் பொருளோடும் பிறக்கிறானா என்றால் இல்லை! இறக்கும் பொழுதாவது பொன்னோடும் பொருளோடும் இறக்கிறானா என்றால் அதுவும் இல்லை. பிறக்கும்பொழுது எப்படி ஒன்றையும் கொண்டு வராமல் மனிதன் பிறக்கிறானோ அப்படியே இறக்கும் பொழுதும் ஒன்றையும் கொண்டு செல்லாமல்தான் இறக்கிறான். எனவே இந்த பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட காலத்தில் நம்மிடம் வந்து சேருகின்ற பொருளை இறைவன் நமக்குத் தந்தது என்று எண்ணி அதை எல்லோருக்கும் பயன்படும்படிப் பகிர்ந்தளித்து நல்ல முறையில் வாழாமல் சாகிறார்களே சில கயவர்கள், அவர்களுக்கு நான் என்ன சொல்லுவேன்! அவர்களை எப்படித்தான் திருத்துவதோ இறைவனே!'' என்று இறைவனிடத்தில் முறையிடுகிறார் பட்டினத்தார்.

''பிறக்கும் பொழுது கொடு வந்ததில்லை
பிறந்து மண் மேல்
இறக்கும் பொழுது கொடு போவ
தில்லை இடை நடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன் தந்த
தென்று கொடுக்கறியா(து)
இறக்கும் குலாமருக்கென் சொல்லு-
வேன் கச்சி ஏகம்பனே!''

தொந்தி-வயிறு - பெருத்தவர்கள் இருக்கிறார்களே அவர்கள் மகிழ்ச்சியோடு இருக்கின்ற நேரத்தில் பார்த்தால் அவர்களுடைய கை வயிற்றின் மேல்—தொந்தியின் மேலே தான் இருக்குமாம். பெருமையோடு அதை தடவிக் கொண்டேயிருக்குமாம். இப்படி மனிதன் தன் பருத்த தொந்தியைப் பார்த்துப் பார்த்து ''நம்முடைய தொந்தியல்லவா?'' எனப் பூரித்துக் கொண் கொண்டிருக்க, அதே தொந்தியைப் பார்த்த வண்ணம் வேறு சிலவும், ''இந்த தொந்தி ஒரு நாளைக்கு நமக்கல்லவோ வந்து சேரப் போகிறது! இந்த தொந்தி நமக்குத்தான்! நமக்குத்தான்!'' என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருக்கின்றனவாம். அவை எவையென்னில் நாயும் நரியும் பேயும் கழுகும் என்கிறார் பட்டினத்தார். இந்தக் காட்சியின் மூலம் அவர் ''இந்த உலகத்தில் நாம் நிலைத்து இருப்போம் என்று எண்ணுவது பொய். ஒரு நாளைக்கு நாம் சாகப் போவது தான் மெய்!'' என்கிறார். எனவே இந்த நிலையற்ற சிறு பொழுது வாழ்க்கையிலே ஒருவருக்கும் தீங்கை எண்ணாமல் வாழுங்கள் என்கிறார்.

''இருப்பது பொய் போவது மெய்
என்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே!
பருத்த தொந்தி
நம்மதென்று நாமிருப்ப நாய் நரிகள்
பேய் கழுகு
தம்மதென்று தாமிருக்குந்தான்''.

இத்தகைய அறிவுரைகளையே பட்டினத்தார் தம் பாடல்களில் நெடுக எடுத்துரைக்கிறார். நம்முடைய உடலும் உயிரும் சேர்ந்து அழிவதாயிருப்பினும் சரி. பாவியென்று-பொல்லாதவரென்று-பெயரெடுக்கக் கூடாது. நல்லவராகவே வாழ வேண்டும்'' என்கிறார்.

''ஆவியொடு காயம் அழிந்திடினும்
மேதினியில்
பாவியென்ற நாமம் படையாதே!''

பசிக் கொடுமை மக்களைப் படுத்துகின்ற பாடு கொஞ்சநஞ்சமன்று! இந்த பசிப் பிணியை அறவே ஒழிக்க வேண்டுமாயின் எல்லோரும் பகுத்துண்டு வாழ வேண்டும். பசியென்று வருவோர்க்கு ஒரு பிடி அன்னமாவது புசிக்கத் தர வேண்டும். அப்படித் தராமல் வாழ்கின்ற கல் நெஞ்சம் இருக்கக் கூடாது என்பதை,

''அன்னம் பகிர்ந்துண்ண அறிந்திலையே
நெஞ்சமே''
''பார்த்திரங்கி அன்னம் பசித்தோர்க்கு
ஈயாமல்''
''பாக்களவாம் அன்னம் பசித்
தோர்க்குகீயாமல்''

என்னும் அடிகளின் மூலம் அவர் வற்புறுத்துகிறார்.

''தெய்வம் ஒன்று உண்டு என்றிருக்க வேண்டும், செல்வம் நிலையற்றது என்பதை உணர்ந்து வாழ வேண்டும். பசித்தவர்களின் முகத்தைப் பார்த்து இரங்கி அவர்க்கு உணவளிக்க வேண்டும். நல்ல அறநெறியை போற்றி நட்பை பாராட்டி வாழ வேண்டும்'' என்றெல்லாம் அவர் நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார்.

''ஒன்றென்றிரு தெய்வம் உண்
டென்றிரு உயர் செல்வமெல்லாம்
அன்றென்றிரு பசித்தோர் முகம்பார்-
நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு......'' என்கிறார்.

நிலையாமையை உணர்ந்து அறநெறியில் வாழ்ந்து வந்தாலும், வாழ்க்கையின் இடையிடையே பிரிவும், மாறுதலும், துன்பமும், துயரமும் ஏற்படுவது இயற்கை! அவற்றையெல்லாம் பற்றற்றத் தன்மையுடன் ஏற்று, சலித்துக் கொள்ளாமல் வாழ வேண்டும். வாழ்க்கையில் ஒரு தீங்கு ஒரு துன்பம் வந்துறுகின்ற பொழுது அழுதால் என்ன பயன்? நொந்தால் என்ன பயன்? தொழுதால் தான் என்ன பயன்? ஒன்றுமில்லை.

'' வல்லான் வகுத்த வகையல்லால்
கோடி
தொகுத்தார்க்கும் துயித்தல் அரிது''

என்ற வள்ளுவரின் வாய் மொழிப் படி, நம்முடைய செயலுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒன்றினால் இத்தீங்கு வந்துள்ளது. வந்து போகட்டும் என்று சலிக்காமல் பொறுத்துக் கொள்வதுதான் சாலச் சிறந்தது. இதனையே பட்டினத்தார்,

அழுதாற் பயனென்ன நொந்தாற்
பயனென்ன ஆவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை
ஒருவர் சுட உரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையும்
தீமையும் பங்கயத் தோன்
எழுதாப்படி வருமோ சலியாதி (ரு)
என் ஏழை நெஞ்சே!

என்று பாடுகிறார்.

எனவே பட்டினத்தாருடைய பாடல்கள் எல்லாம் மக்கள் வாழ்க்கையை வெறுத்து, செல்வத்தைத் துறந்து வாழ வேண்டும் என்பதற்காக எழுந்தவையல்ல. மக்கள் வாழ்க்கையை நல்ல நெறியில் நடத்திச் செல்வத்தை நல்ல முறையில் செலவிட்டு வாழ வேண்டும் என்பதற்காகவே எழுந்தவையாகும் என்று அறிதல் வேண்டும்.



தொடர் கட்டுரை

# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்,
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

நாம் ஆரோக்கியமாக உயிர் வாழ வேண்டுமானால் சுவாசித்தல் நல்ல முறையில் நடைபெற வேண்டும். காற்றை நல்ல முறையில் உள்ளிழுத்து வெளிவிடவேண்டுமானால் மூக்கில் எந்த தடையும் நோயும் வாராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். மற்றும் மூக்கினால் வாசனைகளை நுகர்ந்து, வாசனைகளின் வித்தியாசங்களை கூற முடிகிறது. அதே மூக்கினால் சுவாசிப்பதன் மூலம் உடலுக்கு உயிரூட்டப்படுகிறது. அப்படிப்பட்ட மூக்கை நாம் கவனக் குறைவாலும், அஜாக்ரதையாலும் தெரிந்தோ தெரியாமலோ இயற்கைக்கு புறம்பான கார்யங்களில் ஈடுபடுவதாலும் நோய்க்கு உள்ளாக்கி விடுகிறோம்-எப்படி?

மிகவும் மண், புழுதி கலந்த காற்றுள்ள இடங்களில், அக்காற்றை நாம் உள்ளிழுப்பதன் மூலம், அப்புழுதியில் உள்ள வியாதிக் கிருமிகளால் முதலில் தாக்கப்படுவது மூக்கு தான். பிறகு மூக்கைத் தாண்டிக் கொண்டு மூச்சுக் குழல், நுரையீரல் எனப்படும் சுவாசப்பைக்குச் செல்வதால் இவைகளும் பலதரப்பட்ட வியாதிக்கு அடிமையாகிவிடுகின்றன. மேலும் அங்கு முன்பிருந்த வியாதிகளும் பெருகி வேறு பல சிக்கல்களை உண்டாக்க வழிவகுக்கிறது. இப்படிப்பட்ட புழுதி, தூசி இவைகள் நாசியில் புகுந்து செல்வதை முடிந்து வரை தடுப்பதற்காகவே இறைவன் நம் மூக்கினுள் உரோமங்களை ஏற்படுத்தியிருக்கிறான். இப்படி மூக்கின் உட்பாகத்தில் வளர்ந்துள்ள உரோமங்கள் காற்றில் கலந்து வரும் மண், தும்பு தூசிகளை பெரும்பகுதியை வடிகட்டி சுத்தமான காற்றை மட்டுமே உள்ளுக்கு அனுப்புகிறது. எஞ்சியுள்ள சிறு பகுதிக் கிருமிகள் உட்சென்றாலும் நம் உடலில் உள்ள நோய் எதிர்ப்புச் சக்தியினால் இக்கிருமிகள் அழிக்கப்பட்டு விடுகின்றன. ஆதலில் மூக்கினுள் உள்ள ரோமங்களை கத்தரித்தலோ, க்ஷவரம் செய்தலோ கூடாது. மேலும் மூக்கிற்கு பொடி (நஸ்யம்) போடுபவர்களுக்கும், புகைப் பிடிக்கும் பழக்கம் உள்ளவர்கட்கும், குறிப்பாக புகையை மூக்கினால் வெளியே விடுவதாலும், மூக்கின் உள்பாகத்தில் உள்ள பூந்தசைகள் புகையால் தாக்கப்படுகிறது. மூக்கில் அழற்சி ஏற்படுகிறது. அப்படி ஏற்பட்ட அழற்சியிலோ, புண்ணிலோ மேலும் எரிச்சல் அல்ல எரிவு உண்டாகும் அளவுக்கு மேற்கூறிய தீய பழக்கங்கள் தொடர்ந்துவரின் வியாதி முதிர்ந்து புற்று நோய்கூட ஏற்படவும் காரணமாகிறது.

ஓர் ஊரிலிருந்து இன்னோர் ஊருக்கோ, அல்லது ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கோ, நாம் மாறும் போது அந்தச் சூழ்நிலையில் உள்ள தூசி கலந்த காற்றாலோ, தண்ணீரின் மாற்றத்தாலோ, சீதோஷ்ண நிலையாலோ மேற்கூறிய தீய பழக்கங்களின் விளைவுகளாலோ அல்லது உணவு வகைகளில் சிலவற்றாலோ நமக்கு நாசியில் தினவு எடுப்பதும், ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கத்திற்கு தினவு மாறுவதும் காணப்படும். இந்த உணர்ச்சிக்குப்பின் மூக்கில் தும்மல் விழும். நீர் வடியும். இவைகளின் விளைவால் மூக்கில் மாறிமாறி அடைப்பு ஏற்படும். தலை கனத்து வலிக்கும். இதை சீதளம் அல்லது சளி பிடித்தல் Cold அல்லது Coldness என்பர். இவ்வியாதி வந்தால் தகுந்த தற்காப்பும் ஓய்வும் எடுத்துக்கொண்டால் நான்கு நாட்களிலிருந்து ஒரு வாரத்திற்குள் தானே குறைந்து விடும். இவ்வியாதி வருடத்தில் ஓரிரண்டு முறை வந்தால் கவலைப்பட வேண்டியதில்லை. இதுவே அடிக்கடி வந்தால், இதையே நாசிகாரோகம் அல்லது பீனிசம் (பீனசம்) என்று அழைக்கப்படுகிறது. இதை ஆரம்ப கட்டத்தில் ஆங்கிலத்தில் Nasal Allergy என்றும் முற்றிய கட்டத்தில் Sinusitis (மூளையன்-மூக்கிணை எலும்புப் புழை அழற்சிக் கோளாறு) என்றும் கூறுவர். அப் பீனிசம் எனப்படும் நோயை இந்திய மருத்துவ சாத்திரப்படி பல வகைகளாகப் பிரித்தனர்.

பீனிசத்தின் பொதுக்குணம்: மூலத்திற் கனலேறி கபாலத்தில் நீரையேற்றி ஒரு நாசியையடைத்து மறு நாசியில் நீர் வடியும். அடிக்கடி தும்மல் விழும். பிடரியும், தலையும் கனத்து வலிக்கும். வாரம் தோறும் கபாலம் வரண்டு நீர் திரண்டு விழும். நாறும். தேகத்தில் வெது வெதுப்பு காணும். சில சமயம் நாசி இரண்டு பக்கமும் அடைக்கும். சுவாசித்தல் சிரமமாக இருக்கும். துர்வாசனை கூட தெரியாது. நெற்றியில் கண் புருவத்தின் மேல் பாகத்தில் விண்விண்னென்ற வலிகாணும். வலிகண்ட இடத்தில் கட்டை விரலால் அழுத்தினால் தாளவொண்ணா வலி இருக்கும். இதையடுத்து முகத்தில் கண்களின் கீழ்ப் பைகளுக்கு கீழே, நாசியின் பக்க வாட்டங்களில் உள்ள பகுதியில் கை விரலால் அழுத்தினாலும் வலி காணும். நாவில் ருசியும் மணமும் கெடும். சிரசுநீர் நெஞ்சிலிரங்கி கட்டும்.

## பீனிசத்தின் குணங்கள்

வாதபீனிசம்: நாசி வரண்டு நீர் வடியும். பின் நீர் பழுத்து சளி போல் திரண்டு நாற்றமின்றி விழும்.

பித்த பீனிசம்: நாசி வழியில் மஞ்சள் நிறமாய் சளி வடியும். புலால் நாறும்.

சிலேத்தும பீனிசம்: நாசி மாறி மாறி அடைக்கும். முத்துபோல் நீர் வடியும். நாறும் நாசியில் ஊசியில் குத்தியது போன்ற உணர்வு ஏற்படும். கண்களிற் பீளை சாடும்.

நீர்ப் பீனிசம்: பித்தமும் வெட்டையும் அதிகரித்துச் சிரசிலேறி, நாசி வழி நீர் வழிந்து கொண்டிருக்கும். பனிவாடையிலோ, மழையிலோ நனைந்தால் சிரசில் நீர் மிகுந்து பிடரியும் முகமும் பரபரத்து ஊறும். நாசியரிக்கும். அடிக்கடி தும்மல் விழும். தலைகனத்து வலிக்கும்.

இரத்த பீனிசம்: மிகுந்த வெட்டையினால் பித்தம் மிஞ்சி, கபாலத்தில்

ஏறி புண்ணுகி நாசிவழியில் இரத்தம் வரும், தலை வலிக்கும்.

சீழ்ப் பீனிசம்: வெட்டையும் பித்தமும் கபாலத்திலேறி அதிகரிப்பதனுல் கபாலம் முதல் நாசி வழி புண்ணுகி சீழ் வடியும். தலைவலிக்கும்.

சிறுப் பீனிசம்: நாசி வழி சிறுய் போலும் ஈருள்ளி கூடு போலும் சீழ் திரண்டு விழும். பிணம் போல நாறும். மணம் தெரியாது. விடாமற் தலை வலிக்கும்.

## மேற்கண்ட நோய்கட்கு நிவர்த்தி

நல்லெண்ணெய் படி ஒன்று, கரிசாலைச் சாறு கருநொச்சிச் சாறு வகைக்குப் படி அரை இவைகளை ஒன்ருய்க் கலந்து அதில் மிளகு ஒன்றரை பலம், சாம்பிராணி ஒரு பலம் இடித்துப் போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து அதில் நல்ல அபின் நான்கு விராகனிடை போட்டு வைத்துக் கொண்டு எட்டு நாட்களுக் கொரு முறை தலை முழுகி வர தீரும். நல்ல அபின் கிடைக்காவிடில் ½ பலம் சத குப்பையை அரைத்துப் போட்டு முன் மருந்துடனே கலந்து காய்ச்சிக் கொள்ளவும்.

வேறு முறை: வேங்கைப் பட்டை, சீந்திற்தண்டு, வில்வ வேர், சிற்ருமுட்டி வேர் வகைக்குப் பலம் எட்டு இவைகளை இடித்து அதில் நல்லெண்ணெய் ஒரு படி, அமுக்கரு வேர் பட்டை மூன்று பலம், விளாமிச்சை வேர், வெட்டி வேர் வகைக்கு அரை பலம், ஆவின் பாலில் அரைத்துப் போட்டு அன்ருடம் ஒரு தாழம்பு மடலைப் போட்டு ஐந்து நாள் வரை மந்தாக்கினியாக (சிறுந்தீயாக) காய்ச்சி வடித்து அதில் குங்குமப் பூ, புணுகு, பச்சைக் கற்பூரம் வகைக்கு ஒரு விராகனிடை பொடித்துப் போட்டு வைத்துக் கொண்டு தலையிற்றேய்த்து சிறிது நேரம் ஊற வைத்து முழுகி வர நோய் தீரும்.

மூலப் பீனிசம் - கண்டப் பீனிசம் - இவைகளின் குணங்கள்: நாசியில் கோழிச் சதை போலும் அதன் சூடு போலும் வளரும். நாசியில் சுண்டைக் கால் போல் சதை வளர்ந்து அடைக்கும். சிரசு நீர் நெஞ்சியிலிறங்கி கபம் கட்டும்.

இவைகட்கு நிவர்த்தி: ஆயிற் பட்டை, மலாக்காய் சந்தணம் அல்லது சந்தணம் வகைக்கு இரண்டு விராகனிடை, மட்டிப்பால் சாம்பிராணி ஒன்றரை விராகனிடை, மிருதார்சிங்கி ஜாதிலிங்கம், அரிதாரம் வகைக்கு ஒரு விராகனிடை, இலுப்பைப் பிண்ணுக்கு ஒரு பலம் இவைகளை ஊமத்திலைச் சாற்றில் அரைத்துக் கொள்ளவும். எருக்கம் பாலும், சதுரக்கள்ளி பாலும் ஒரு வெள்ளைத் துணியிலூட்டி உலர்த்திய பின் மேற்படி மருந்தை அதிற்பூசி காய வைத்து கொஞ்சங் கொஞ்சமாக கத்தரித்துச் சுங்கானில் வைத்தேனும், அல்லது அப்படியே துணியைச் சுருட்டி பற்ற வைத்தேனும் புகையை நாசியிலேற்ற மூலப் பீனிசம், கிருப் பீனிசம், கபால சூலை, வலி இரணம் முதலியவைகளும் தீரும். தினமும் இப்புகையைப் பிடிப்பதால் நாசியில் எரிச்சல் கண்டால் 4 நாட்கள் நிறுத்தி ஒரு நாள் விட்டு ஒரு நாள் பிடிக்கலாம்.

(தொடரும்)

---

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

சைலக் குறிப்பிட்ட கெடு தீர்ந்து விட்டக் காரணத்தினுல் தனக்குச் சேர வேண்டியது அந்தோனியோவின் ஒரு பவுண்டு சதையே தவிர, பணமல்ல என்கிருன்.

''சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்
அன்ருே?''

கல் மனத்தைக் கரைய வைக்கும் முயற்சியில் இறங்கினுள் பசானியோவின் மனைவி போர்சியா. சைலக்கின் முன்பு தானும் ஒரு வழக்குரைஞராக நின்று இரக்கத்தின் உயர்வினைக் கூறும் பாங்கு பாராட்டுக்கு உரியதாகும்.

''எளியோர்க்கு இரங்குதல் அருங் குணம் அன்ருே? வானிலிருந்து பொழியும் மழைத்துளி போல, கொடுப்போரையும், எடுப்போரையும் அடுத்து நின்று காப்பது அன்பினைச் சார்ந்த இரக்கமே ஆகும். அந்த இரக்கமே வலிமையினும் மிக்க வலிமை உடையதாகும்.

அவனியைக் காக்கும் அரசருடைய மணிமுடியைக் காட்டிலும் இரக்கம் நனி சிறந்ததாகும். அரசனது அங்கையில் இருந்து அச்சம் விளைக்கும் செங்கோலின் புறத்தது இரக்கமே ஆகும். மன்னனின் மனமாகிய பீடத்தில் அரசு வீற்றிருக்கும் அன்பெனும் அருங்குணம் இறைவனின் குணங்களில் ஒன்ருகும்.

நீதியோடு அன்பும் நிலை பெற்று நிலவுமானுல் அஃது ஆதி இறைவனின் அருள் என வாழும்.'' (The Merchant of venice, Act IV Scene I Portia *182-195* By A.W. Verity, Cambridge University Press.)

இவ்வாறு இரக்கத்தின் இன்றியமையாமையை எடுத்தியம்புகிருள் போர்சியா. பசானியோ, அந்தோனியோ சைலக்கிடமிருந்து பெற்ற தொகையைப் போல பதின் மடங்கினும் அதிகமாகத் தர ஆயத்தமாக இருப்பதாகக் கூறினுன்; ஆனுல் சைலக்கின் கல்மனம்தான் கரையவில்லை.

சைலக் சொல்லியவாறு எழுதப் பட்ட கடன் ஒப்பந்த வாசகத்தின் வரிகளை வைத்துக் கொண்டே அவனை இறுதியில் மடக்கி விட்டாள் போர்சியா. அந்தோனியோவின் உடலில் இருந்து ஒரு பவுண்டு சதையை எடுக்கும்போது ஒரு சொட்டுக் குருதி கூட சிந்தக் கூடாது என்று நிபந்தனை விதித்து சைலக்கை மடக்குகிருள் போர்சியா. அவள் மட்டும் தனது முயற்சியை அன்று மேற்கொள்ளாமல் இருந்திருந்தால் நடந்திருப்பது வேறல்லவா?

ஆகவே, கம்பனின் தாரையும், சேக்சு பிரியரின் போர்சியாவும் உலக மகாகவிகளின் அற்புதப் படைப்புகள் ஆவர். கிட்கிந்தையையே அழித்து விடும் நோக்கத்துடன் வந்த இலக்குவனின் சீற்றத்தை அடக்கி, மனமாற்றம் ஏற்படுத்திய தாரையின் சொல்வன்மையையும், கல்மனம் கொண்ட சைலக்கின் முன்பு நீதி மன்றத்தில் ஆற்றிய போர்சியாவின் சொல் வன்மையையும் நமக்குக் காட்டிய மகாகவிகளின் கை வண்ணம் போற்றுதற்கு உரியதாகும்.

# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

## கண்ணனாய் வந்தான்!

பிறந்தது வேர்ஓரிடம்! வளர்ந்ததுவே
பெருந்தியிடம்! கண்ணா! நீதான்
சிறந்தது சிறுபிள்ளைச் செயலாலே!
செருக்குடனே உன்னை முன்னாள்
மறந்தது கஞ்சனுக்கு மரணத்தை
அளித்தது எனஅறிந்தே
பறந்ததென் நெஞ்சத்தின்
அகங்காரம்! பகவானே! பக்திஅருளே!

(மாருதிதாசன்)

திருமாலின் திருஅவதாரங்களுள் ஒன்பதாவது அவதாரமாக வைத்து எண்ணப்படுவது கிருஷ்ணாவதாரம். கண்ணன் துவாபரயுகத்து நாயகன்.



கண்ணனை எண்ணாதார் கலியுகத்தில் யாருமிலர். உலகமெங்கும் கிருஷ்ணனின் சிறப்புபேசப்பட்டு வருகிறது. ''அரே கிருஷ்ணா! அரே ராமா!'' போன்ற பல்வேறு இயக்கங்களும் தோன்றி வளர்ந்து வருகின்றன. கண்ணனைப் பல்வேறு கோணத்திலும்வழி படுவோர் காசினியில் நிரம்ப உளர். பக்தர்களின் நெஞ்சத்தைக் கவரும் கள்வன் கார்மேகக் கண்ணன். அவன் அழகிலும் ஆடல்களிலும் ஈடுபடாத ஆடவர் பெண்டிர் எவரும் இந்த அவனியில் இருக்கமுடியாது. அவன் அவதாரச் சிறப்பையும் திருவிளையாடல்களையும் விரித்துரைக்கப்புகின் அது ஒரு பெரு நூலாக வளரும். எனவே, கிருஷ்ணாவதாரம் பற்றிச் சுருக்கமாகவே காண்போம்.

மக்கள் தொகைப் பெருக்கம் எல்லாக் காலத்திலும் தொல்லையையே கொடுத்து வந்துள்ளது. மக்கள் தொகை அதிகமாகச் சூதும் வாதும் வஞ்சனையும் அதிகரிக்கும். அதர்மம் தலைவிரித்தாடும். நல்லோர் பலராக இருந்து மக்கள் தொகை பெருகினால், அதனால் உலகிற்குக் கேடு எதுவும் விளைந்து விடாது. மாறாக, நன்மையே விளையும். ஆனால் தீயோரின் எண்ணிக்கை பெருகி விட்டாலோ, உலகுக்கு விளையும் கேட்டினுக்கு அளவேயிருக்காது. இத்தகையதொரு நிலை துவாபர யுகத்தில் ஏற்பட்டது. மக்கள் தொகைப் பெருக்கத்தினால்பூமாதேவி பெரிதும்வருத்தமுற்றாள்.

கம்சன், சிசுபாலன் முதலான கொடியவர்களும், அவர்களின் சுற்றத்தாரும் நல்லோர் பலருக்கும் தொல்லை கொடுத்து வரலாயினர். இதனால் பூபாரம் மிகுதியாயிற்று. தன்பாரத்தைக் குறைக்குமாறு பூமாதேவி பிரமதேவனிடம் சென்றுமுறையிட்டாள். ''பூபாரம் தீர்க்க வல்லவர் திருமாலே'' யென்றும், ''நாமனைவரும் அவரிடம் சென்று முறையிடுதலே தக்க''தென்றும் முடிவு செய்து அனைவரும் புறப்பட்டனர். பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரந்தாமனைக் கண்டு பரவி நின்றனர். திருமால் அவர்கள் முன்னே தோன்றித் திருவாய் மலர்ந்தருளினார்.

''தேவர்களே! உங்கள் குறையை நான் முழுவதுமாக அறிவேன்! உங்கள் குறைவிரைவில் தீரும். வருணன் இட்ட சாபத்தினால் காசிப முனிவர் வசுதேவராகவும், காசிபரின் மனைவியான அதிதி தேவகியாகவும் வடமதுரையில் வந்துதோன்றியுள்ளனர். அவர்களின் மகவாக வந்து நான் அவதரிப்பேன். அப்போது தீயோர்களை அழிப்பேன். நல்லோரை வாழ வைப்பேன்! தர்மத்தை நிலைநாட்டுவேன்! அப்போது உங்கள் கலக்கம் நீங்கும். சென்று வருக!''

திருமால் அருளியதைக் கேட்டுத் தேவர் முதலானோர் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர்.

அச்சமயம், வடமதுரையை உக்கிரசேனன் என்ற பெயருடைய மன்னன் ஆண்டு வந்தான். உக்கிரசேனனின் மைந்தன் கம்சன். இவன் தீக்குணமுடையவன். தீயவர்களுக்கெல்லாம் தலைவன். எனவே, அவனால் நல்லோர்கட்குத் தொல்லையும், தீயோர்க்கு நன்மையும் விளையலாயிற்று. தன் தந்தையாகிய உக்கிரசேனனையே சிம்மாதனத்திலிருந்தும் கீழே இறக்கினான். தானே மன்னன் என்று கூறிக்கொண்டு மகுடத்தைச் சூட்டிக் கொண்டான். நாட்டையும் ஆண்டு வந்தான். கொடுங்கோல் மன்னனின் கீழ்வாழ்வதை விடக் கடும் புலி வாழும் காட்டில் வாழ்வதே சிறந்தது என மக்கள் பேசிக்கொண்டனர்.

கம்சனின் உடன் பிறந்தவள் தேவகி. தேவகிக்குத் திருமணப் பருவம் வந்துற்றது. தேவகியை வசுதேவர்க்கு வெகு ஆடம்பரமாகத் திருமணம் செய்து கொடுத்தான் கம்சன்! கம்சனுக்குத் தங்கையின் மீது தணியாத அன்பு உண்டு. எனவே தங்கையையும் மைத்துனரையும்

தேரிலேற்றிக் கொண்டு தானே தேரைச் செலுத்திச் சென்றான். அப்படிச் செல்வதில் அவனுக்கு அளவில்லாத ஆனந்தம்! அப்போது இடியொலி கேட்பது போன்று வானொலி ஒன்று அவன் செவிகளைத் தாக்கிற்று.

''கசடனாகிய கம்சனே! உன் தங்கையின் மீதோ நீ அளவில்லா அன்பு வைத்திருக்கிறாய்! எந்தத் தங்கையின் மீது அளவற்ற பாசம் கொண்டிருக்கிறாயோ, அந்தத்தங்கையின் வயிற்றில் பிறக்கப் போகும் எட்டாவது கருவே உனக்கு எமனாக அமையப் போகிறது. இதனை நீ உணர்ந்து கொள்!''

அசரீரி கேட்டுக் கம்சன் நடுநடுங்கிப் போனான். இந்த ஆபத்திலிருந்தும் தப்புவதற்கான உபாயம் ஒன்றை யோசிக்கலானான். தன் தங்கையைக் கொன்று விடுதலே தக்கதென்று முடிவு செய்தான். எனவே, தன் உடைவாளை உருவினான். தன் தங்கையைக் கொல்ல முற்பட்டான். வசுதேவர் இதனைக் கண்டு நடுநடுங்கிப் போனார். மாலையும் கழுத்துமாக நிற்கும் வசுதேவர் மைத்துனனாகிய கம்சனை நோக்கிக் கூறலானார்.

''மைத்துனா! அசரீரி சொற்கேட்டு உன் அன்புத் தங்கையைக் கொல்ல வாளை உருவி நிற்கிறாயே! 'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்பார்களே! உன் தங்கையை உன் கையினாலேயே கொல்வதற்காகவா இவ்வளவு ஆடம்பரத்துடன் திருமணம் செய்து மகிழ்ந்தாய்! மரணம் என்பது எல்லாருக்கும் நேரக் கூடியதுதானே! மரணத்திலிருந்தும் தப்பிப் பிழைத்தவர்கள் உலகில் யாரேனும் உளரா? உன் தங்கையின் கருவால்தானே உனக்கு இறுதி என்று அசரீரி கூறிற்று. உன் தங்கையால் உனக்கு எவ்விதத் தீமையும் இல்லையே! எனவே, உன் தங்கையின் வயிற்றில் பிறக்கும் குழந்தைகளைப் பிறந்தவுடனேயே உன்னிடம் ஒப்படைத்து விடுகிறேன். அக் குழந்தைகளை உன் விருப்பம் போலவே செய்து விடு. மாலையும் கழுத்துமாக மணக் கோலத்தில் காட்சியளிக்கும் உன் தங்கைக்கு வாழ்வு கொடு!''

வசுதேவரின் சொற்கள் கம்சனின் கருத்தை மாற்றியது. அவர் கூறிய கருத்துக்கள் அவனுக்கு நியாயமாகவே தோன்றியது. அதன்படி, வசுதேவரையும் தேவகியையும் தன் பாதுகாப்பிலேயே வைத்துக் கொண்டான். இருவரையும் சிறையிலடைத்தான். நாட்கள் சில சென்றன.

தேவகி கருப்பமுற்றாள். குழந்தையும் பிறந்தது. சேதியறிந்த கம்சன் குழந்தையைக் கொண்டு வரச் சொன்னான். பெற்றோர் கதறினர். என்ன செய்வது! முதல் குழந்தை கம்சனின் வாளுக்கு இரையாயிற்று. இவ்வாறே ஒன்றன் பின் ஒன்றாகப் பிறந்த ஏழு குழந்தைகளும் கம்சனின் வாளுக்கு இரையாயின. எட்டாவது குழந்தை பிறக்கப்போகும் செய்தி கம்சனுக்கு எட்டியது. கம்சன் கதி கலங்கிப் போனான்.

வானொலி பலிக்கும் காலம் வந்தது. முன்பு தேவர்கட்கு அருள் புரிந்த வண்ணமே திருமால் தேவகியின் வயிற்றில் எட்டாம் கருவாக வந்து தங்கினார். ஆவணி மாதம் கிருஷ்ணபட்சம் அஷ்டமி திதியோடு கூடிய ரோகிணி நட்சத்திரத்தில், விருஷப லக்கினத்தில் இரவுப் பொழுதில் கிருஷ்ணாவதாரம் நடைபெற்றது. சங்கு சக்கரதாரியாகக் கண்ணன் அவதரித்தபோது தாய் தந்தையரின் விலங்குகள் தாமே அற்றுப் போயின. தேவகியும் வசுதேவரும் கண்ணனைக் கண்ணாரக் கண்டு கண் பெற்ற பயனை அடைந்தனர்.

சங்கு சக்கரதாரியாகத் தோன்றிய குழந்தையைத் தந்தையும் தாயும் பலவாறு போற்றி வழிபட்டனர். தெய்வ வடிவுடன் திகழும் குழந்தைக்குக் கம்சனால் ஆபத்து ஏதும் விளையாமல் இருக்க வேண்டுமே என்று எண்ணிக் கலங்கினர். எனவே, தெய்வ வடிவை மாற்றியருளுமாறு வேண்டி நின்றனர். திருமாலும் தன் தெய்வ வடிவை மாற்றி மானிடக் குழந்தையாகக் காட்சியளித்தார். வசுதேவரை நோக்கிக் குழந்தை பேச லாயிற்று.

## ஆசார்யர்கள் திருநக்ஷத்ர தினங்கள்

| | |
|---|---|
| 1–11–81 | மணவாள மாமுனிகள் |
| 2–11–81 | சேனை முதலியார் |
| 5–11–81 | பொய்கையாழ்வார். பிள்ளை லோகாசாரியார் |
| 6–11–81 | பூதத்தாழ்வார் |
| 7–11–81 | பேயாழ்வார் |

## பண்டிகைகள்

| | |
|---|---|
| 4–11–81 | ச்ரவண வ்ரதம் |
| 8–11–81 | உத்தான ஸர்வ ஏகாதசி |
| 11–11–81 | பௌர்ணமி |
| 15–11–81 | காவிரி கடை முழுக்கு |
| 16–11–81 | காவிரி முடவன் முழுக்கு |
| 22–11–81 | ஸர்வ ஏகாதசி |
| 26–11–81 | ஸர்வ அமாவாஸ்யை |

"மன்னவனே! கோகுலத்தில் நந்தகோபன் மனைவி யசோதைக்கு இதே நேரத்தில் பெண் மகவு ஒன்று பிறந்துள்ளது. என்னைக் கொண்டு போய்க் கோகுலத்தில் விட்டுவிடு. தேவகியின் வயிற்றினிடமாகப் பிறந்திருக்கும் பெண் மகவை நீ எடுத்து வந்துவிடு."

குழந்தையின் வாக்கைச் செயற்படுத்தத் தொடங்கினர் வசுதேவர். அப்போது நள்ளிரவு நேரம். அனைவரும் உறங்கிக் கொண்டிருந்தனர். குழந்தையை எடுத்துக்கொண்டு வசுதேவர் கோகுலம் நோக்கிப் புறப்பட்டார். பூட்டியிருந்த மாளிகையின் கதவுகள் தாமே திறந்து வழி விட்டன. அப்போது வான் முகில் விடாது பெய்தது. ஆயிரந் தலையுடைய ஆதிசேடன் குழந்தைக்குக் குடையானன். வழியில் யமுனையாறு குறுக்கிட்டது. குழந்தையைக் கண்டதும் யமுனை வழி விட்டது. வசுதேவர் எவ்வித இடையூறுமின்றி யமுனையாற்றைக் கடந்து சென்ருர்; நந்தகோபனுடைய மலர் வனத்தைச் சார்ந்தார்.

அந்நள்ளிரவில் நந்தகோபனுடைய மாளிகையில் யசோதை மயக்கமுற்றுக் கிடந்தாள். யசோதைக்குச் சற்று முன்னர்தான் பெண் மகவு ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தைக்கு ரோகிணி என்பது பெயர். குழந்தை பெற்ற மயக்கத்தில் தனக்குப் பிறந்தது ஆண் மகவா? பெண் மகவா? என ஒன்றும் அறியாதவளாக யசோதை கண்ணயர்ந்திருந்தாள். அங்கே யசோதையையும் குழந்தையையும் தவிர வேறு யாருமில்லை. அப்போது, தான் கொண்டு சென்ற ஆண் மகவை வசுதேவர் யசோதையின் அருகே கிடத்தினர். யசோதை பெற்ற பெண் மகவை எடுத்துக் கொண்டு யாருமறியாவண்ணம் தன் மாளிகைக்கு விரைந்து வந்தார். கொண்டு வந்த குழந்தையைத் தேவகியிடம் கொடுத்தார். உடனே, அவர் கால்களில் தாமே தளைகள் பூட்டிக் கொண்டன. மாளிகைக் கதவுகளும் தாமே பூட்டிக் கொண்டன. வசுதேவருக்கும் தேவகிக்கும் தவிர வேறு யாருக்கும் இந்த நிகழ்ச்சி தெரியாது.

குழந்தை அழும் ஒலி வசுதேவர் மாளிகையில் எழுந்தது. மகவொலி கேட்ட வாயிலோர் மன்னனிடம் சென்று குழந்தை பிறந்துள்ள செய்தியைக் கூறி நின்றனர். மதங் கொண்ட யானை போல் கம்சன் விரைந்து குழந்தையிடம் சென்ருன். எமனைக் கண்டது போல், தேவகி கம்சனைக் கண்டு நடுங்கினள். அண்ணனின் காலடிகளில் வீழ்ந்து பலவாறு புலம்பிக் கதறியழுதாள்.

"அண்ணு! இக்குழந்தையின் அழுகைப் பாருங்கள். ஆண் குழந்தையால் தானே உனக்கு ஆபத்து நேரும் என்று அசரீரி கூறியது. இது பெண் குழந்தைதானே! இக்குழந்தையால் உனக்கு என்ன தீங்கு நேர்ந்துவிடப் போகிறது? ஏழு குழந்தைகளையும் பறிகொடுத்தேன். இக்குழந்தையாவது என்னேடு இருக்கட்டும். இவள் வளர்ந்தால் உன் மகனுக்குத் திருமணம் செய்து கொடுத்துமகிழ்வேன். என் ஆசையில் மண்ணை அள்ளிப் போட்டு விடாதே அண்ணு!"

இவ்வாறு தேவகி புலம்பிக் கூறியவை கம்சனின் செவிகளில் ஏறவில்லை. குழந்தையைத் தேவகியின் கைகளிலிருந்து வெடுக்கென்று பறித்துக் கொண்டான். குழந்தையின் கால்களைப் பற்றிக் கரகரவென்று சுற்றிப் பாறையொன்றின் மேல் மோதிச் சாகடிக்க முனைந்தான். என்னே அதிசயம்! கம்சனின் கையிலிருந்த குழந்தை திடீரென அவன் பிடியிலிருந்தும் நழுவியது: அவன் தோள்களையுதைத்தது: வானின் கண் சென்று நின்றது. ரோகிணி என்னும் அக்குழந்தை துர்க்காதேவியின் அம்சம் என்பதைக் கம்சன் எவ்வாறு உணர்வான்? கம்சன் ஆத்திரத்துடன் வானை நோக்கினுன். வானெலி அவன் செவியைத் தொளைத்தது:

"ஆணவம் கொண்ட அரக்கனே! பாறைமேல் மோதியா என்னைக் கொல்லப்பார்த்தாய்? மூடனே! என்னைக் கொல்ல உன்னல் ஆகுமோ? உன்னைக் கொல்லப் போகும் ஒருவன் ஓரிடத்தில் பிறந்து மற்றோரிடத்தில் ஒளிந்து வளர்ந்து வருகிறன். அவனால் நீ மாளப் போவது உறுதி!"

இவ்வாறு கூறிவிட்டு ரோகிணி உடனே வானிலிருந்தும் மறைந்து போனள்.

ரோகிணியின் சொல் கேட்டுக் கம்சனின் தலை சுற்றியது. செய்வவறியாது திகைத்தான். தன் தங்கைக்குத் தான் செய்த கொடுமைகளைச் சிறிது சிறிதாகச் சிந்திக்கத் தலைப்பட்டான். தான் செய்த செயல்கள் தவருனவை என்று அவனுக்குப்பட்டது. எத்தகைய கொடியவரும் தாங்கள் செய்த செயலை எண்ணி ஒருநாள் வருந்தியே தீருவர். கம்சன் தன் தங்கையை நோக்கிக் கூறலானன்.

"தங்கையே! ஒன்றுமறியாக் குழவிகளின் உயிர்களைக் குடித்தேன். உன் கண்ணீரைத் துடைக்க வேண்டிய நான், உன் இதயத்தையே உடைத்து விட்டேன், என் வினைப்பயனை நான் அனுபவித்தே தீர வேண்டும். விதியின் வினையை விலக்கவல்லவர் யாருளர்? சாதலும் பிறத்தலும் உலகத்து இயற்கை யன்றோ! எல்லாப் பொருள்களும் ஒருநாள் அழிந்து தானே தீர வேண்டும்! நான் உனக்குச் செய்த பிழைகளைப் பொறுத்துக்கொள் அம்மா"

இவ்வாறு தன் செயலுக்கு வருந்திக் கூறிய கம்சன் அவ்விடத்தை விட்டு அகன்ருன். எனினும், அவன் உள்ளத்தில் ரோகிணி கூறிய சொற்கள் உறுத்திக்கொண்டேயிருந்தன. எனவே, தன் அமைச்சர்களை அழைத்துப் பேசினன். உலகில் உள்ள எல்லாக் குழந்தைகளையும் கொன்று விட்டால் அரசனுக்கு அழிவே இருக்காது என்று துன்மதி அமைச்சர்கள் மன்னனுக்கு ஆலோசனை கூறினர். மந்திரிகளின் சொல்லை மன்

னன் கேட்டான்: காணுகின்ற குழந்தைகள் அனைவரையும் கொன்று விடுமாறு அசுரர்கள் பலரையும் பல விடத்துக்கும் அனுப்பி வைத்தான். பூதனை என்னும் அரக்கியும் அவர்களுள் ஒருத்தி!

இதற்கிடையே நந்தகோபன் மனையில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் காண்போம்:

தன் மனையகத்தே வளரும் தாமரைக் கண்ணனின் தளிர்முகம் நோக்கி நந்தகோபன் ஆனந்தக் கடலுள் மூழ்கினான். தன் குழந்தைக்குச் செய்யவேண்டிய சிறப்புச் செயல்களையெல்லாம் செய்து மகிழ்ந்தான். நந்தகோபன் மனையில் வளரும் கண்ணனைக் கண்டு ஆயர்கள் மகிழ்ச்சியால் துள்ளினர். கண்ணனை ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் குழந்தையாகவே பாவித்து வந்தனர். அவர்கள் கொண்ட மகிழ்ச்சியினை என்னென்பது! மல்லிகை முல்லை முதலான மலர்களைக் கொண்டு பூப்பந்து செய்து மகிழ்ந்தாடினர். வாசனைப் பொடி முதலானவற்றை ஒருவர் மீது ஒருவர் வீசி விளையாடினர். இதனால் ஆயர்பாடி இந்திரனின் நகரைப் போலக் காட்சியளித்தது. அவர்கள் கொண்ட மகிழ்ச்சியினைப் பெரியாழ்வார் தம்மனக் கண்ணால் கண்டு பாடுகிறார்.

வண்ண மாடங்கள் சூழ்திருக்
கோட்டியூர்க்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர்
தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தள றாயிற்றே!

ஓடுவார் விழுவார் உகந்து ஆலிப்பார்
நாடுவார் நம்பிரான்எங்குத்
தான்என்பார்
பாடுவார் களும்பலபறை கொட்ட
நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே!

பேணிச்சீருடைப் பிள்ளை பிறந்தினில்
காணத் தாம்புகு வார்புக்கு போதுவார்
ஆணொப் பாரிவன் நேரில்லை காண்திரு
வோணத் தான்உலகு ஆளும்என்
பார்களே!

உறியை முற்றத்து உருட்டிநின்
றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத்
தூவுவார்
செறிமென் கூந்தல் அவிழத்
திளைத்தெங்கும்
அறிவ ழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே!

ஆயரும் ஆய்ச்சியரும் செய்த புண்ணியத்தை என்னென்பது! உலகளந்த மாயனைக் குழந்தையாகக் கண்டு மகிழ்ந்த ஆயர்களின் செயல்கள் நம் முன்னே களிநடம் புரிகின்றதன்றோ!

கண்ணன் லீலைகளைக் கேட்டுக் களிப்படையாதார் யாருமே இலர். கிருஷ்ணாவதாரத்தின் சிறப்பே அவன் குறும்புத்தனமும் துடுக்குத்தனமும் தான்! தொட்டில் பழக்கமே துடுக்குத் தனமாகத்தான் அமைந்தது!

குழந்தையின் சுறுசுறுப்பைச் சகிக்க முடியாத யசோதை அவனைத் தொட்டிலில் கிடத்தினாள். அவனோ, தொட்டிலே கிழியுமாறு உதைத்தான். தொட்டிலைக் கிழித்து விடுகிறானே என்று எடுத்துக் கொண்டாலோ, யசோதையின் இடுப்பை ஒடிப்பான். நன்றாக அணைத்துக் கொண்டாலோ வயிற்றிலே பாய்ந்து வதைப்பான். அப்பப்பா எவ்வளவு துடுக்குத்தனம்! இவ்வாறு அவன் தரும் அன்புத் தொல்லைகளைத் தாங்க மாட்டாமல் யசோதை மெலிந்த போய் விட்டாளாம்! ஒரு குழந்தையை வளர்ப்பதில் எவ்வளவு தொல்லை!

கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில் மருங்கை இறுத்
திடும்
ஒடுக்கிப் புல்லில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான்மெலிந்
தேன நங்காய்!

*(9, கண்ணன் அவதாரம்)*

குழந்தையின் அழகில் யசோதை தன் மனத்தைப் பறி கொடுத்தாள். சிறுபிள்ளைத் தனத்தைக் கண்டு சிந்தை குளிர்ந்தாள். பொன்னாலும் மணியாலும் அலங்கரித்துப் பூரித்து நின்றாள். பட்டும் பீதாம்பரமும் உடுத்திப் பரவசமடைந்தாள். பொட்டிட்டுப் புன்னகை செய்தாள். குழந்தையின் புன்னகையில் தன்னையே மறந்தாள். கார்மேனியழகில் கருத்தையே யிழந்தாள்.

கண்ணனின் தொல்லை பொறுக்க மாட்டாமல் யசோதை எவ்வளவு தான் மெலிவடைந்தாலும் அவன் மீது வைத்திருந்த ஆசைக்கு அளவே யில்லை. தன் குழந்தையின் திருமேனி யழகை வந்து காணுமாறு ஆய்ச்சியரையெல்லாம் கூவியழைப்பாள்.

முத்தும் மணியும் வயிரமும் நன்
பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற்
போல்எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்
கள்
ஒத்திட் டிருந்தவா காணீரே!
ஒண்ணுதலீர் வந்து காணீரே!

*(2. கண்ணன் திருமேனி அழகு)*

"கண்ணா! கண்ணா!" என நாவாரக் கூப்பிட்டு நலம் பல பெற்றாள் யசோதை. அவன் வாயில் ஊறும் எச்சிலில் தேனும் பாலும் போன்ற சுவையைக் கண்டாள். முத்தமாரி பொழிந்து முகமும் அகமும் மலர்ந்தாள். "நான் பெற்ற பேறு இந்த நானிலத்தில் வேறு யார் பெற்றார்!" என இறும்பூதெய்தி நின்றாள். குழந்தையின் பொக்கை வாய்ச் சிரிப்பில் இந்தக் குவலயத்தையே மறந்தாள். தேனூறும் இசையாலே அவனைத் தாலாட்டினாள்.

மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச்
சிறுத்தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே தாலேலோ!
வையம் அளந்தானே தாலேலோ!

*(1, தாலப்பருவம்)*

இவ்வாறு குழந்தையைத் தாலாட்டித் தூங்க வைத்து விட்டுத் தன் குடும்ப வேலையைச் செய்யப்போனாள் யசோதை.

கம்சனின் ஏவலால் புறப்பட்டவருள் ஒருத்தியாகிய பூதனை கோகுலம் வந்து சேர்ந்தாள். குழந்தையாகிய கண்ணன் உறங்கும் இடத்தை யடைந்தாள். குழந்தையைச் சுற்றி யாரும் இல்லாததால், தான் வந்த வேலையை எளிதாக முடிக்க எண்ணினாள். நஞ்சு தீற்றிய பாலைக் கொடுத்துக் கண்ணனைக் கொல்லத் தூக்கத்திலிருந்தும் அவனை எழுப்பித் தன் கையில் எடுத்துக் கொண்டாள்.

(தொடரும்)

மண்டைக்காடு பகவதி அம்மன் கோயில் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள பெயர் பெற்ற அம்மன் கோவிலாகும். இக்கோயில் அம்மன் இம்மாவட்ட மக்களால் மிகச் சக்தி வாய்ந்த தெய்வமாக வணங்கப்படுகிறது. மண்டைக்காடு என்ற இந்த இடம் நாகர்கோவிலிலிருந்து இருபது கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. திருவனந்தபுரத்திலிருந்து ஐம்பது கிலோ மீட்டர் தள்ளி இருக்கிறது.

இக் கோயிலின் அருகிலேயே சாஸ்தா கோவில் ஒன்றுமிருக்கிறது. அம்மன் கோவிலில் பூசை முடிந்த பிறகு சாஸ்தா கோவிலில் பூசை நடைபெறும். ஐயப்பனையே இங்கு சாஸ்தா என்று வணங்குகிறார்கள்.

ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையும், வெள்ளிக் கிழமையும் விசேஷ பூசை நடைபெறும். சித்திரா பௌர்ணமி மிக விசேஷமாக இருக்கும். பௌர்ணமிதோறும் பக்தர்கள் வருகை மிக அதிகமாக இருக்கும்.

இக் கோவிலில் ஆண்கள் குத்தியோட்டம் என்றும், பெண்கள் பூமாலை என்றும் நேர்த்திக் கடன் செலுத்துவார்கள். குழந்தை இல்லாமலிருந்து இவ்வம்மனை வணங்கிப் பின் குழந்தைப் பேறு பெற்றவர்களும் தங்குழந்தைகள் நோய் தீருவதற்காக வேண்டிக் கொள்வதும் இதுவே. மேலும் கொடையன்று கால், கை, மற்ற உருவங்களை மரத்தாலும், வெள்ளியாலும், பொன்னாலும் அவரவர்க்குத் தகுதிக்கேற்றபடி நேர்த்திக் கடன் செலுத்துவார்கள்.

# மண்டைக் காட்டுப் பகவதி அம்மன் கோயில்

இங்குள்ள அம்மன் மிகப் பெரிய அளவில் செய்யப்பட்டுள்ளது. மூலத்தானம் மேடாக அமைக்கப்பட்டுள்ளது. மூலத்தானத்திலுள்ள அம்மன் வேறு எக்கோவிலிலுமில்லாதபடி மண்ணால் ஆனது. இதற்கு அபிடேகம் கிடையாது. நாளுக்கு நாள் இவ்வம்மன் உருவம் வளர்ந்து வருவதாகக் கூறுகிறார்கள். மூலத்தானத்தின் முன் வெள்ளி கவசம் தரித்த அம்மன் செய்து வைத்திருக்கிறார்கள். இங்குள்ள சிறப்பு, அம்மனைக் கோயிலின் முன்பகுதியில் எங்கு நின்றாலும் தரிசிக்க முடியும். மேடான பகுதியில் அமைந்திருக்கும் ஒரு சிறப்பே இதற்குத் துணை புரிகிறது.

கோவில் மிகப் பெரியதாக இல்லாமல் ஓரளவு பெரியதாக இருக்கும். இக் கோவில் அமைப்பு கேரளக் கோவில்களைப் போன்று காணப்படும். சுற்றிலும் ஓடு வேய்ந்த தாழ்வாரங்கள் காணப்படுகின்றன. அவற்றில் அடுப்புகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இங்கு வரும் யாத்திரீகர்கள் சமையல் செய்து சாப்பிட வசதியாக இவை இருக்கின்றன. மேலும் இவர்கள் அம்மனுக்குக் கொழுக்கட்டை செய்து படைக்கவும் இவை துணைபுரிகின்றன.

கும். அவர்கள் வசதிக்குப் போக்குவரத்துக் கழகம் 'சிறப்புப் பேருந்துகள்' விடுவதையும் காணலாம்.

மாசி மாதம் நடைபெறும் பத்து நாள் விழா மிக விசேஷமானது. இவ் விழா மாசி மாதக் கடைசி செவ்வாய்க் கிழமையன்று முடிவடையும். 'மண்டைக் காட்டுக் கொடை'யென்று கடைசி நாளைக் குறிப்பிடுவார்கள். முதல் நாள் கொடியேற்றி விழாவைத் தொடங்குவார்கள். பத்து நாட்களும் மிகுதியான மக்கள் கூட்டம் இவ் விழாவைக் கண்டும், கலந்தும் மகிழ்த்திரண்டு வரும். கொடியேற்றிய பின், கொடைக்கு முந்திய வெள்ளிக் கிழமையன்று வலிய படுக்கை என்று ஒரு பூசை இரவு 12 மணிக்கு நடைபெறும். கொடை நாளுக்கு முன்தினம் சந்தனக் குடமொன்றை யானையின் மேல் ஏற்றி மேள, தாளங்களுடன் அம்மனுக்குச் சாத்துவதற்கென்று கொண்டு வருவார்கள். இச் சந்தனத்தை மூலத்தானத்திலுள்ள அம்மனுக்குச் சாத்துவார்கள்.

பங்குனி மாதத்தின் பரணி நட்சத்திர நாள் இங்கு தூக்கம் என்ற பெயரில் கொண்டாடப்படும்.

இனி, இக்கோயிலைப் பற்றிக் கதைகளும் வழங்கப்படுவதைக் காணலாம். முதலில் காடாக இருந்த இப் பகுதியில் மாடு மேய்க்கும் சிறுவர்கள் விளையாட்டாக மண்ணைப் பிடித்து வைத்துத் தெய்வமாக வணங்கி வந்தார்களாம். பின்னர் அதுவே யாராலும் அழிக்க முடியாதபடி உறுதியுடன் இருந்தது எனவும், அதுவே மண்டைக் காட்டுப் பகவதி

**திருமதி எஸ்.அழகம்மாள், சென்னை.**

அம்மன் என்றும் கூறுவர். மற்றொரு கதையும் இக் கோயிலைப் பற்றி வழங்குகிறது. ஒரு நாள் இங்கு மாடு மேய்க்க வந்த சிறுவன் ஒருவன் புல் அறுக்க, அவ்விடத்திலிருந்து ரத்தம் பெருக்கோடியது. சிறுவன் அஞ்சிப் பக்கத்து கிராமத்து மக்களை அழைத்து வந்தான். அவர்கள் அதைக் கண்டு அவ்விடத்தைப் பக்தியுடன் வணங்கினர். சிலர் சிறிது மண்ணை எடுத்து அதில் இட்டனர். அப்போது இரத்தப் பெருக்கு நின்று விட்டது. அடுத்த நாள் அது மண் புற்றாக மாறிச் சிறிது வளர்ந்திருந்தது. இவ்வதிசயத்தைக் கண்ணுற்ற ஊர் மக்கள் அங்கு ஒரு சிறு கோவிலைக் கட்டி வணங்கி

னர். இதுவே இக் கோயில் என்றும் இக்கதை அமைகிறது.

பகவதி வழிபாட்டுக்காக அமைந்த கோயில்களுள் ஐந்து கோயில்கள் சிறப்புப் பெற்றவையாகக் கருதப்படுகின்றன. கொடுங்கல்லூர், செங்கன்னூர், சொட்டானிக் கரை, கன்னியாகுமரி ஆகிய இடங்களிலுள்ள கோவில்களுடன் மண்டைக் காட்டுக் கோவிலும் ஒன்றாக விளங்குகிறது.

இக் கோவில் கடற்கரை ஓரமாகவே இருக்கிறது. நாகர்கோவிலிலிருந்து இங்கு வருவதற்குக் கடற்கரையையொட்டிச் சாலை அமைத்திருக்கிறார்கள். கன்னியாகுமரியின் குறிப்பிடத்தக்க இடங்களான குளச்சல் துறைமுகம், முட்டம், மணவாளக் குறிச்சி ஆகிய இடங்கள் கடற்கரை வழியாக ஒரு கிலோ மீட்டர் தூரமே இருக்கும். திங்கள் சந்தை எனும் இடத்திலிருந்து மண்டைக் காட்டிற்குப் பேருந்துகள் அடிக்கடி விடப்படுகின்றன.

இந்தக் கோவில் கன்னியாகுமரி அறநிலையக் குழுவின் கீழிருக்கிறது. திருவிழாக் காலங்களில் இந்து சமயக் கூட்டங்கள், கதாகாலட்சேபங்கள் முதலியன நடைபெறும். இது 1956-இல் கேரளத்திலிருந்து தமிழ் நாடு தனியான பொழுது தமிழ் நாட்டுடன் சேர்ந்தது. ஆதலால் கேரளாவிலிருந்து திருவிழா நாட்களில் மிகுதியான பக்தர்கள் வருவார்கள். திருவிழா நாட்களில் கேரளாவிலிருந்தும், தமிழ்நாட்டிலிருந்தும் 'கூடுதல் பேருந்துகள்' விடப்படும். சில ஆண்டுகளுக்கு முன்பு வரை கேரளத்திலுள்ளவர்கள் 41 நாட்கள் விரதமிருந்து, இருமுடி கட்டி, 'சரணம் பொன்னம்மா தேவி சரணம்' எனக் குரலெழுப்பிக் கொண்டு, சபரி மலைக்குச் செல்வது போல கால்நடையாகவே, கூட்டங் கூட்டமாக வருவார்கள். இப்போது அந்த வழக்கம் மாறி விட்டது. எனினும் விழாக்கள் சிறப்புடனே நடத்தப்படுகின்றன.

கேரளாவில் இருந்த கராணத்தால் இங்கும் மலையாள பகவதி வணக்கம் குறிப்பிடத்தக்கதாக இருக்கிறது. நாமும் அந்த 'வேண்டியதைக் கொடுக்கும் பகவதியை' வணங்கி நலம் பல பெறுவோமாக!



# துலா ஸ்தானம்

செல்வி. ஐ. ஜெயலக்ஷ்மி - அனந்தமங்கலம்.

ஐப்பசி மாதத்தில் காவிரி நதியில் விடியற் காலையில் நீராடுதலையே துலா ஸ்தானம் என்கிறோம். காவிரி நதியானவள் குடகு நாட்டில் பிறந்து கல்லும் மலையும் கடந்து மைசூர், சோழ நாடுகளை வளப்படுத்துகிறாள். காவிரி என்னும் கன்னிப் பெண் என இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் காவிரியின் சிறப்பை விளக்குகிறார். கம்பனோ தனது இராம சரிதத்தில் கங்கை என்னும் திருநதி என்று கூறியவன் தெய்வ பொன்னியே பொருவும் கங்கை என்று காவிரியை ஏற்றம் கூறுகிறான். அத்துடன் மட்டுமல்லாமல் கங்கையிற் புனிதமாய காவிரி என்றும் ஆழ்வார் ஒருவர் கூறுகிறார். இப்படி ஒவ்வொரு புலவனும் காவிரிக்கு ஏற்றம் கூறுவானேன்? காவிரிக்கு கிடைத்த இப்பெருமையை நாம் அறிய துலா ஸ்தான மகாத்திமம் என்ற நூலைப் பார்க்க வேண்டும்.

கண்ணுவ மகரிஷி கங்கையில் நீராடும் விருப்பத்துடன் வடக்கு நோக்கி செல்கிறார். வழியிலே மூன்று சண்டாள கன்னிகைகளை சந்திக்கிறார். அவர்கள்தான் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் தெய்வ நதிகள் என்றும், அவர்களிடம் பல லக்ஷகணக்கான மக்கள் தத்தம் பாவம் நீங்க மூழ்கியதால் அவர்களது பாவக்கரையெல்லாம் இவர்களிடம் தோய்ந்து இவர்களே சண்டாளர்களாக மாறிவிட்டனர் என்றும் அறிகிறார். இவர்கள் தங்கள் சண்டாளத் தன்மையை போக்க வல்ல தன்மையுடைய காவிரியை நோக்கி தெற்கே வருகின்றனர் என்றும் அறிகிறார். எல்லோரது பாவங்களையும் நீக்கி முத்தி அருளவல்ல புனிதையே காவிரி அன்னை. இவள் இப்படி பெருமை யுற்றிருப்பதாலேதான் துலா மாதத்தில் தேவர்கள், முனிவர்கள், சரஸ்வதி, லக்ஷ்மி கௌரி முதலிய ஸப்த மாதர்கள் இங்கு வந்து நீராடுகின்றனர்.

ஐப்பசி முப்பது நாளும் நீராட முடியாதவர்கள் மூன்று நாட்களாவது நீராட வேண்டும். அதுவும் முடியாதவர்கள் கடைசி நாளாவது நீராட வேண்டும். அதுவும் முடியாதவர்கள் கீழ்க்கண்ட ஸ்லோகத்தை கூறி வீட்டிலேயே நீராடலாம்.

த்ரி ராத்ர ஜாந்நவி
பாஞ்ச ராத்ரஞ்ச யமுனா
காவிரி பாபம் ஆமர ணாந்திகம்.

துலா மாதத்தில் நீராடிய பிறகு சுமங்கலிப் பெண்கள் அன்னை தெய்வம் காவிரியை வணங்கி பெண்களுக்கு மங்களப் பொருட்களை (மஞ்சள், குங்குமம், புஷ்பம், வெற்றிலை பாக்கு) வழங்குவார்களேயானால் ஸப்த மாதர்களின் பாவங்களை போக்கும் காவிரி தெய்வம் சுமங்கலி பெண்களின் பாவங்களைப் போக்கி அவர்கள் சகல ஷேமங்களும் பெற்று தீர்க்க சுமங்கலியாக வாழ வழிச் செய்யும் என்பது திண்ணம்.



*(12-ம் பக்கத் தொடர்ச்சி)*

இவற்றிற்கான பதில்களை இனி வர இருக்கும் சுலோகங்களில் தாம் தெரிவிக்க இருப்பதாக பகவான் பகர்கிறார். க்ஷேத்ரம் என்றால் எது, ஏன் சரீரம் க்ஷேத்ரம் என அழைக்கப்படுகிறது, அது அடையும் மாற்றங்கள் யாவை, அதனது தன்மைகள்யாவை? அது யாருடையது, யாருக்குரியது, அந்த நிலத்தை நம்மால் பண்படுத்த முடியுமா? பண்படுத்தமுடியுமானால் எப்படிப் பண்படுத்துவது...... என்பன போன்றவற்றையெல்லாம் அவர் விவரமாக எடுத்துரைக்க இருக்கிறார்.

ஏற்கனவே சரீரத்தை முன்பு வயலுக்கு உவமானமாகச் சொன்னோம். சரீரமே வயல். பத்துப் புலன்களும் பத்துக் காளை மாடுகள். பொறிகள் மூலமாக இந்தப் பத்துமாடுகளும் இரவும், பகலும் எந்நேரமும் ஓயாது தொழில் புரிந்த வண்ணம் இருக்கின்றன. மனம்தான் மேற்பார்வையாளன்; ஜீவாத்மனே அந்த வயலின் சொந்தக் காரன். ஐந்து பிராணன்களும் ஐந்து பணியாட்கள்; மூலப்ரகிருதியே இந்த வயலின் எஜமானி. அவளே இந்த வயலை நேரடியாகக் கண் காணிக்கிறாள். அவள் முக்குண மயமானவள். சத்வ, ரஜஸ், தமோ குணங்களே அவை. ரஜஸ் விதை விதைக்க, சத்வம் அதைக் காக்க, தமஸ் அறுவடை செய்கிறது. காலம் எனும் எருதினால் அவள் தானியத்தைச் சூடடிக்கிறாள். ஜீவாத்மன் பாபம், பொருமை ஆகிய விதைகளை விதைத்திருப்பதால் அதற்கேற்ப பிறப்பு, மூப்பு, மரணம், வியாதி போன்ற தீய விளைவுகளை அறுவடை செய்கிறான். நல்லதை விதைத்திருந்தால் பேரின்பம் எனும் அறுவடையைப் பெறுகிறான்.

சிந்திக்கும் திறன் உடையவனே மனிதன். சிந்தித்துச் சிந்தித்துச் சிவமாக ஆவதுதான் மனித வாழ்வின் இலட்சியமாகும். எண்ணிய எண்ணியாங்கு எய்துவது என்பது மனிதனுக்குரிய தனிச் சிறப்பாகும். உலகைப் பற்றிச் சிந்திக்க வல்ல மனிதன் சில பல வேளைகளில் தன்னைப் பற்றியும் சிந்திக்கத் தலைப்படுகிறான். உலகத்தைப் பற்றிச் சிந்திக்கும்தொறும் விஞ்ஞானம் வளர்கிறது. தன்னைப் பற்றிச் சிந்திக்கும்தொறும் மெய்ஞானம் வளர்கிறது. 'இந்த உலகம் எத்தகையது? எங்கிருந்து வந்தது? எப்படித் தோன்றியது? எங்ஙனம் மாற்றம் அடைகிறது? எப்படி முடிவுறும்?' என்பன போன்ற கேள்விகளையெல்லாம் கேட்டு அவற்றிற்கான விடைகளைக் கண்டு பிடிக்க முயல்பவன் விஞ்ஞானி எனப்படுகிறான். 'நான் யார்? எங்கிருந்து வந்தேன்? ஏன் பிறந்தேன்? என் இலட்சியம் என்ன? பிறவாத நிலை என்று ஒன்று உண்டா? அப்படி உண்டென்றால் அதை அடைவது எப்படி?'' என்பன போன்ற வினாக்களை எழுப்பி அவற்றிற்கான விடைகளைக் காண விழைபவன் மெய்ஞானி எனப்படுகிறான்.

கேள்விகள் அனைத்திலும் கஷ்டமான கேள்வி, ''நான் யார்?'' என்பதே யாகும். அதற்கான பதிலைத் தான் வேத உபநிடதங்கள் எல்லாம் விரிவாக நமக்கு எடுத்துப் புகட்டுகின்றன. இதைத் தான் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்பதை விளக்கும் விதத்தில் பகவான் ஈண்டு விவரிக்க இருக்கிறார்.

'ருஷிபிர் பஹுதா கீதம்
சந்தோபிர்விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்மஸூத்ர பதைஸ்சைவ
ஹேதுமத்பிர்விநிஸ்சிதை: ‖ 4 ‖

'(இந்த உண்மையானது) ரிஷிகளாலும், வேதங்களாலும், பிரம்ம ஸூத்ர வாக்கியங்களாலும் தர்க்க பூர்வமான முறையில் பல விதங்களில் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது.'

இந்த க்ஷேத்ரம் மற்றும் க்ஷேத்ரக்ஞனைப் பற்றி பல்வேறு ரிஷிகள் விளக்கமாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். 'பஹுதா' என்ற வார்த்தை பலவிதமாக என்று பொருள்படுகிறது. வசிஷ்டர் போன்ற ரிஷிகள் மட்டுமின்றி ரிக், யஜுர், ஸாம மற்றும் அதர்வண வேதங்களும் இவற்றைப் பற்றி நிரம்பக் கூறியிருக்கின்றன.

பிரம்ம ஸூத்ரம் என்பது வேத வியாசர் எழுதிய வேதாந்த ஸூத்ரத்தைக்குறிக்கிறது. பாதராயணர்என்பதும் வியாசருக்கு அமைந்த மற்றொரு பெயர். உப நிடதங்களில் முரணான வாக்கியங்கள் பல ஆங்காங்கு காணப்படுகின்றன. அவற்றைப் படிக்கின்றவர்களுக்கு ஏற்படும் குழப்பத்தை நீக்குவதற்கும், உபநிடதக் கருத்துக்களை உள்ளபடித் தெளிவாக தெரிந்து கொள்வதற்கும் பிரம்ம ஸூத்ரம் பெரிதும் உதவுகிறது. பிரம்ம ஸூத்ரத்திற்கு 'சாரீரக ஸூத்ரம்' என்னும் மற்றொரு பெயர் உண்டு. ஏனெனில் அதனுடைய இரண்டாவது அத்யாயத்தின் மூன்றாவது பாகத்தில் காணப்படும் பதினைந்து ஸூத்திரங்கள் சரீரம் அல்லது க்ஷேத்திரத்தைப் பற்றி விளக்கிக் கூறுகின்றன. அதே பிரம்ம ஸூத்திரத்தில் க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய விரிவான விளக்கமும் காணப் படுகிறது.

'விநிஸ்சிதை': மற்றும் 'ஹேதுமத்பி:' என்ற வார்த்தைகள் 'நிச்சயமாகவும்; 'யுக்தி பூர்வமாகவும்' என்று பொருள்படுகின்றன. வேத உபநிடதங்களில் உள்ள க்ஷேத்திர, க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய விவரங்கள் ஐயத்துக்கு இடமற்றவை, தீர்மானமாகக் கூறப்பட்டவை; தவிர பல்வேறு உவமான உவமேயங்களோடு தர்க்க பூர்வமாகக் கூறப்பட்டுள்ளவை என்பதால் அது பற்றிய எவ்வித சந்தேகமும் எழத் தேவையில்லை. அவை முடிவாக முடிந்த வார்த்தைகள் என்பதைப் பகவான் இங்கே உணர்த்துகிறார்.

'ரிஷிகளால் பலவகையாகச் சொல்லப்பட்டது என்று சொன்னோமல்லவா? அது பற்றி இங்கே கொஞ்சம் சுருக்கமாகக் காண்போம்.

நமது இந்த சரீரத்தைப் பற்றி பலவகையான கருத்துக்கள் நிலவுகின்றன. ஷட்தர்சனங்களில் நியாயம், மற்றும் வைசேஷிகத்தை முறையே கௌதமர், கணாதர் என்ற ரிஷிகள் ஏற்படுத்தினர். அவர்களது கருத்துப்படி இந்த சரீரமானது அணுக்களின் சேர்க்கையால் கடவுளால் படைக்கப்பட்டது. அவர்களது அணுக் கொள்கையின்படி, அணுக்கள் உருவமற்றவை, எண்ணிக்கையில் அடங்காதவை. உருவ

மற்ற களிமண்ணிலிருந்து பல்வேறு விதமான உருவங்களைக் குயவன் உருவாக்குவது போல, உருவமற்ற அணுக்களின் சேர்க்கையால் இறைவன் என்னும் குயவனுர் இத்தனை ஜீவராசிகளையும் படைத்திருக்கிறுர். ஜீவராசிகள் மட்டுமல்லாது, சர, அசர, சேதன அசேதனப் பொருள்கள் யாவையும் அணுக்களின் சேர்க்கையேயாகும்.

ஒன்றேடொன்று சேருதல் அணுக்களின் இயற்கைத் தன்மையாகும். ஆனுல் அவை சேர்வது இறைவனின் ஆற்றலினுலேயாகும். அதாவது இயற்கையே இறைவன். ஒவ்வொருவரது கர்மத்திற்கேற்ப இறைவன் அவரவர்களைப் படைக்கின்றுர். இந்தக் கொள்கையானது அணு உலகம், ஆன்ம உலகம், இறைவன் என்ற மூன்று வெவ்வேறுன தத்துவங்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. கிட்டத்தட்ட சைவ சித்தாந்தத்தின் பதி, பசு, பாசத்துடன் இதை ஒப்பிடலாம். இம் மூன்றில் முந்தைய இரண்டான அணுஉலகமும், ஆன்ம உலகமும் எண்ணிக்கையில் அடங்காதவை, பிரத்யேக சக்தி எதுவும் அற்றவை. ஆனுல் இறைவனின் சக்தியோ அபரிமிதமானது, கற்பனைக்கும் எட்டாதது. தற்கால அணுக் கொள்கையும் இதை ஒட்டியே அமைகிறது. செல்களில் உள்ள D.N.A மற்றும் R.N.A. அமைப்புகள் மிகவும் சிக்கலானவை எனினும், ஏதோ ஒரு அடிப்படை நியதிக்கேற்ப மிக அற்புதமான முறையில் சுருள் சுருளாக ஆலமரத்தின் விழுதுகள் போல பல்வேறு அமினே அமில மூலக் கூறுகளால் ஆக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை ஆராயுந்தோறும் நமது அறியாமையே வெளிப்படுகிறது. அந்த அளவுக்குச் சிக்கலான அமைப்பை அவை கொண்டு விளங்குகின்றன.

சாங்க்ய தர்சனத்தின் ஸ்தாபகரான கபில முனிவரது கருத்து மேற்காணும் அணுக் கொள்கையிலிருந்தும் மாறுபட்டதாகும். பிரகிருதியின் 24 தத்துவங்கள் பற்றி அது விரிவாகப் பேசுகிறது. பஞ்ச மகா பூதங்கள் மற்றும் கர்ம, ஞானேந்திரியங்கள், அவற்றின் தன் மாத்திரைகள் மற்றும் மனம், புத்தி, அகங்காரம், மூலப்ரகிருதி ஆகியவற்றின் சேர்க்கையால் சரீரம் உருவாவது பற்றி சாங்க்யம் விளக்கிக் கூறுகிறது.

பிரம்மஸூத்ரத்தின் அடிப்படையில் அமைந்த வேதாந்தக் கொள்கையோ இவற்றிற்கு முற்றிலும் மாறுபட்டது ஆகும்.

(தொடரும்)

# மந்த்ரசாஸ்த்ரம் - சுரபியக்ஷிணி

திலீபன் என்ற சூர்ய வம்ச அரசன் ஒரு முறை விண்ணுலகம் சென்ருன். இந்திரனின் விருந்தினனுகத் தங்கி விட்டு அவன் திரும்பும்போது அங்கு நின்ற தெய்வப் பசுவான காமதேனுவை நமஸ்கரிக்கத் தவறி விட்டான். உடனே அது சாபமிட்டது: "அரசனே! என்னை வணங்க மறந்தாயல்லவா? இனி என்னை வணங்கினுல் கூட மன்னிக்க மாட்டேன். எனக்கு பிறக்கும் கன்றை வணங்கினுலன்றி உனக்கு இனி புத்திரப் பேறு இல்லை" என்ற காமதேனுவின் சாபத்தால் திலீபன் புத்திரப் பேறு இன்றி வருந்தினுன்.

சூர்ய வம்சத்தின் குல குருவான வசிஷ்டர் இதைத் தம் ஞான திருஷ்டியால் உய்த்துணர்ந்து திலீபனுக்கு உரிய பரிஹாரத்தைக் கூறினர். அதன்படி முனிவரது ஆசிரமத்தில் இருந்த காமதேனுவின் கன்ருன நந்தினி என்னும் தெய்வப் பசுவை திலீபனும் அவன் மனைவி சுதக்ஷிணையும் 21 நாட்கள் விரதமிருந்து வழிபட்டனர்.

தினசரி அரசனும் அரசியும் பசுவைப் பூஜை செய்வார்கள். பிறகு ஆசிரம எல்லை வரை அரசி வெளி வந்து பசுவை அரசனுடன் வெளி அனுப்புவாள். அரசன் பூரண ஆயுத பாணியாகச் சென்று பசுவிற்குக் காட்டு மிருகங்களால் இடையூறு ஏற்படாதவாறு அருகில் நின்று மேய்த்து விட்டு மாலையில் திரும்புவான் அரசி. தபோவன வாயிலில் காத்து நின்று ஹாரத்தி எடுத்து நந்தினிப் பசுவிற்குத் திலகமிட்டு வரவேற்பாள்.

இரவு நேரங்களில் பசுவிற்கு ஒரு புறம் அரசனும், மறுபுறம் அரசியுமாகக் கணவன்-மனைவி என்ற உறவின்றி விரத நெறியுடன் வெறுந் தரையில் படுத்து உறங்குவார்கள். இதற்குப் பெயர் "அஸீதாரா விரதம்" என்பதாகும்.

இவ்விதம் இருபத்தொரு நாட்கள் நடந்து முடிந்ததும் நந்தினி என்னும் அந்த தெய்வப் பசு அரசனை சோதிக்க எண்ணியது. அன்று பகல் மேய்ச்சலுக்கு சென்றபோது அந்தப் பசுவைத் தாக்க ஒரு சிங்கம் வருவதை அரசன் கண்டான். உடனே தன் வில்லைக் கையில் எடுத்து சிங்கத்தைக் குறி வைக்க முயன்ருன். உடனே திலீபன் என்ற அந்த அரசனின் கைகால்கள் செயலற்றுப் போயின.

சிங்கம் மனிதக் குரலில் பேசத் தொடங்கியது:"அரசனே! நான் சிவ தூதன். என் பெயர் கும்போதரன். இது பார்வதி தேவிக்கு உரிமையான நந்தவனம். இதன் காவலாளி நானே! இந்த எல்லைக்கு வருபவரை அடித்து உண்ண எனக்கு ஈசனின் கட்டளையும் உண்டு. எனவே என்னை எந்த தெய்வ சக்தியும், வர மஹிமையும் ஒன்றும் செய்ய முடியாது. பிரதோஷ காலங்களில் ரிஷபத்தின்மீது பரமேச்வரனும் பார்வதியன்னையும் ஏறும் முன்பு என் மீது பாதத்தை வைத்துத்தான் ஏறுவர். எனவே உனக்கு மட்டும் உயிர்ப் பிச்சை அளிக்கிறேன். உன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு இந்தப் பசுவை எனக்கு ஆகாரமாக அளித்துவிட்டு ஓடுவாயாக!" என்று கும்போதரன் என்று பெயருடைய அந்த சிங்கம் திலீபனை எச்சரித்தது.

திலீபன் அச்சிங்கத்தை நமஸ்கரித்துப் பலவாறும் கெஞ்சிக் குல குரு வசிஷ்டரின் சாபம் தனக்கு நேருவது உறுதி என்று தெரிவித்தான். சிங்கமும் இதுபோல் ஆயிரம் பசுக்களை வசிஷ்டருக்கு அளிக்க அரசனுக்கு சக்தி உண்டு என்றும் அவ்வித மளித்தால் அவரும் கோபம் மறந்து மகிழ்ச்சியே அடைவார் என்று கூற முடிவாக அரசன் தன் உடலைத் தின்று பதிலுக்குப் பசுவை விட்டு விடும்படி கண் கலங்க யாசித்தான். சிங்கமும் சம்மதித்தது. அரசன் கண்களை மூடி பிராணுயாமம் செய்து நிஷ்டையில் அமர்ந்து ஸமாதி நிலையிலேயே உயிரைவிடச் சித்தமானுன்.

சற்று நேரத்தில் நந்தினிப் பசு தன் ஈரம் நிறைந்த நாக்கால் தன்னை வருடுவதை உணர்ந்து கண் திறந்தான். சிங்கத்தைக் காணுமல் திகைத்தான். பசு மனிதக் குரலில் பேசியது. "குழந்தாய்! உன் பக்திக்கு மெச்சினேன்! சிங்கம் முதலிய யாவுமே என்னுல் உருவாக்கப் பெற்ற மாயத் தோற்றங்களே! உன்னை சோதிக்கவே இது செய்யப்பட்டது. நீ இனி என் பாலைக் கறந்து உன் மனைவியுடன் அருந்தி உத்தம மகப் பேற்றினை அடைவாயாகுக!" என்று ஆசீர்வதித்தது. வசிஷ்டர் அனுமதியுடன் அவ்விதமே அத்தெய்வப் பசுவின் பாலை திலீபன் தன் மனைவியுடன் அருந்தி காமதேனுவின் சாபம் தீர்ந்து ரகு என்ற உத்தமமான வீர மகனைப் பெற்ருன். இந்த ரகு குலத்தில் திருமாலே சக்ரவர்த்தி திருமகன் ஸ்ரீ ராமனுக அவதரித்தார். எனவே பசுவின் பெருமை அளவிட முடியாதது.

பகவத் கீதையின் தியான சுலோகம்—'எல்லா உபநிஷதங்களும் பசுக்கள், அர்ஜுனனே கன்று, கோபாலனே கறப்பவன், கீதையாகிய அம்ருதமே பால்' என்று கூறுகிறது. ஆன்மாவிற்குப் பசு என்ற ஒரு பெயரே உண்டு. இந்தப் பசு சென்று அடைவது அந்தப் பதியாகிய சிவனையே என்று சைவ சித்தாந்தம்

திரு. பி. சுந்தரராமன், எம்.ஏ.,பி.இட்.
பழமார்னேரி.

கூறுகிறது. பரமேச்வரன் இதனுல் "பசுபதி" என்றே அழைக்கப்படுகிருர்.

பசுவின் சிறுநீர், சாணம், பால், தயிர், நெய் சேர்ந்த பஞ்ச கவ்யம் உடலையும் உள்ளத்தையும் தூய்மைப் படுத்துவதால், உபநயனம் போன்ற பல விசேஷச் சடங்குகளில் அளிக்கப் படுகின்றன. ஸ்நானங்களில் சிறந்தது பசுவின் குளம்படிபட்ட புழுதி (கோதூளி) ஆகும்.

ஜாதகத்தில் சுக்ரன் நீசனுகவோ தோஷம் உள்ளவனுகவோ இருந்தால் பசுவின் சாபம் இருக்கக் கூடும். இதற்குப் பரிஹாரமாகப் பசுவிற்குப் பச்சைப் புல் அகத்திக் கீரை முதலியவற்றைக் கீழ்க்கண்ட சுலோகங்களைச்

சொல்லியபடி கொடுத்து உண்ணும் படி செய்து நமஸ்கரிக்க வேண்டும்.

'' ஸௌரபேய்ய: ஸர்வஹிதா:
பவித்ரா புண்யராசய:
ப்ரதிக்ருஹ்ணம் த்விமம்க்ராஸம்
காவஸ்த்ரைலோக்ய மாதர:''

இதன் பொருள்: ''காமதேனு வம்சத்தைச் சேர்ந்தவைகளும், எல்லோருக்கும் நன்மை புரிபவைகளும் பரிசுத்தமானவையும், புண்யக் கூட்டங்கள் போன்றவையும், மூன்று உலகிற்கும் அன்னை ஆகியவையுமான பசுக்கள் இந்தப் புல்லைப் பெற்றுக் கொள்ளட்டும்'' என்பதாகும்.

பிறகு, கீழ்க்கண்ட சுலோகத்தைக் கூறிப் பசுவை பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிக்க வேண்டும்.

'' கவாம் அங்கேஷு திஷ்டந்தி புவனானி சதுர்தச
யஸ்மாத் தஸ்மாத் சிவம்மேஸ்யாத்
இஹலோகே பரத்ரச''

பசுவின் அங்கங்களில் பதினான்கு உலகங்களும் இருப்பதால் இந்தப் பசு இவ்வுலகிலும் பரலோகத்திலும் எனக்கு மங்களத்தைத் தரட்டும் என்பது இதன் கருத்து. மேலும் கூற வேண்டிய சுலோகம் பின்வருமாறு:

'' ஸர்வ காமதுகே தேவி
ஸர்வ தீர்த்தாபிஷேசினீ
பாவனே ஸுரபி ச்ரேஷ்டே
தேவி துப்யம் நமோஸ்துதே:''

'எல்லாப் பயனையும் அளிக்கக் கூடியவளும், எல்லா தீர்த்த ஸ்நான பலனைத் தந்தருள்பவளும், பரிசுத்தம் செய்பவளும் ஆன காமதேனுவாகிய தேவியே! உனக்கு நமஸ்காரம்'— இவ்விதம் வலம் வந்து நமஸ்கரிப்பதால் பூமியை வலம் வந்த புண்யம் எளிதில் கிட்டுகிறது.

பரம பாகவதனான துருவனின் வம்சத்தில் வந்த பிருது என்னும் சக்ரவர்த்தி பூமியைப் பசுவாகச் செய்து எல்லா வகை வளங்களையும் கறந்தாரென்று பாகவதம் கூறுகிறது. இதன் தத்துவம் என்னவென்றால் பூமாதேவி பசுவுக்கு சமமானவள். எவ்வுயிரும் தழைக்கப் பல்வளமும் அருள்பவள் என்றே நாம் கொள்ள வேண்டும்.

மஹா பாரதத்தில் விதுர நீதியில் (165) திருதராஷ்டிரனுக்கு விதுரர் தர்மத்தை உபதேசிக்கும்போது, 'தனது குரூரத்தனத்தை எவன் ஒருவன் வேதம் கற்றவரிடமும், பெண்களிடமும், உறவினரிடமும், பசுக்களிடமும் காட்டுகிறானோ அவன் காம்பிலிருந்து பழுத்த பழம் உதிர்ந்து விழுவதைப் போல் விழுந்து அழிவை வெகு சீக்கிரமடைவான்' என்று கூறுவதும் கருத்தத்தக்கது.

சென்னையில் மேல மாம்பலத்தில் ''கோ ஸம் ரக்ஷண சாலா'' என்றும், தேனம்பாக்கத்தில் 'கோ - சாலை' என்றும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கரா சார்ய ஸ்வாமிகளின் பூரண ஆசியுடன் தொடங்கப்பட்ட அமைப்புக்கள் வயதான பசுமாடுகளைக் கசாப்புக் கடைக்குச் செல்ல விடாமல் இறுதி வரை காப்பாற்றி இறந்த பிறகு அவைகட்கு ஈமக்கடன் உள்படச் செய்து வருவது பாராட்டத் தக்கது. பசுவதைத் தடுப்பிற்கு ஆசார்ய வினோபா முன்னாள் எம்.பி. ஆகிய ஜே. பி. மாதுர் போன்றோர் பாடுபட்டு வருகிறார்கள்.

சுரபியக்ஷிணியின் மூல மந்த்ரம் பின் வருமாறு:

'' ஓம் க்லீம் ஐம் ஸௌம் ஓம் நமோ
பகவத்யை ஸுரப்யை நம!''

பசுவின் வியாதி நீங்கிப் பால் கறவை பெருகவும், வீட்டில் கறவையினங்கள் சேரவும், கால் நடைகளைக் காற்று கருப்பு அண்டாமல் இருக்கவும், விஷ ஜந்துக்களிடம் இருந்து காப்பாற்றவும் இந்த மூலமந்த்ரத்தை பசுக் கொட்டிலில் காலை மாலை 1008 முறை உருவேற்றி வர வேண்டும்.

பசுவாகிய பிரத்யக்ஷ தெய்வத்தினைப் போற்றி சுரபியின் அருள் வேண்டி வழிபடுவோமாகுக!

★

# மங்கள வாத்தியம்

திருமதி. என். ஜெயா, பி.எஸ்ஸி.
ஒரத்தநாடு

சங்கீதம் என்ற தாய்க்கு நாட்டியமும் நாதஸ்வரமும் இரண்டு பிள்ளைகள் எனலாம். பாவம், ராகம் தாளம், அபிநயம், பாதக்கிரமம் என்ற இந்த ஐந்துமே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில் ஆயின. சதுச்ரம், திச்ரம், மிச்ரம், கண்டம், சங்கீர்ணம் என்ற இந்த ஐந்து நடைகளுமே பஞ்ச பூதங்களைப் போல உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் இயக்குகின்றன. உலகில் இலை அசைந்தாலும் தலை அசைந்தாலும் எது அசைந்தாலும் இந்த ஐந்து நடைகளில் ஒரு நடையாகத்தான் அமைய முடியும்.

நாதஸ்வரத்தைப் பற்றிய முதல் குறிப்பு பரத சேனாபத்யம் எனும் பரத சாஸ்த்ரத்தில் காணப்படுகிறது. ''......சூரியன், சந்திர, நாதசுர முதலிய துளை, தோற்கருவி வாத்திய இலக்கணம் சுவேத முனி முதலியோர்க்கு இறைவன் சொற்றனன்'' என்ற வரிகளே அவைகளாகும்.

நாதஸ்வரம் ''புஜங்கஸ்வரம்'' என்றும் 'மகுடி' என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. 13-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஸங்கீத ரத்னாகரம் என்ற நூலில் நாதஸ்வரம் என்ற பெயர் காணப்படவில்லை. பிறகு நாதஸ்வரம் என்றும் நாயனம் என்றும் வழக்கில் இருந்துள்ளது.

ஸங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்து ஸ்வாமி தீக்ஷிதர் 'தியாக ராஜ மஹத்வஜா ரோஹ'' என்ற ஸ்ரீராக கீர்த்தனையின் அனுபல்லவியில்,

'' ஆகம ஸித்தாந்த ப்ரதிபாத்யம்
ஆனந்த சந்த்ர சேகர லேத்யம்
நாகஸ்வர மத்தளாதி வாத்யம்
நாம ரூபாதீத மனுத்யம்''

என்று கூறுகையில் நாகஸ்வரம் என்றே குறிப்பிடுகிறார்.

16-ம் நூற்றாண்டைச் சேர்ந்த இரத்தினகிரி உலாவில் நாகஸ்வரம் என்ற பெயரே காணப்படுகிறது. பழனி மாம்பழச் சிங்கக் கவிராயர் நாக சின்னம் என்று குறிக்கிறார். நாகஸ்வரம் செய்யும் விச்வ கர்ம வகுப்பைச் சேர்ந்த இவர் கூற்றும் பொருத்தமுடையதே. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பழம் பெரும் சொல் அகராதியிலும் நாக சின்னம் என்ற பதமே காணப்படுகிறது. நாக சுரம் என்று மருவிப் பிற்காலத்தில் இதுவே நாதஸ்வரம் என்று வழக்கில் வந்திருக்கலாம்.

மேல் நாட்டு ஓபோ (Oboe) என்ற கருவியையும், வட இந்திய ஷெனாய் என்ற கருவியையும் நம் நாதஸ்வரம் ஒத்துள்ளது. கருங்காலி, வேங்கை, தோதகத்தி, சந்தன மரங்களால் முன்பு செய்யப்பட்ட நாதஸ்வரம் தற்போது ஆச்சா மரத்தினால் செய்யப்படுகிறது. இதன் 'சீவாளி' எனப்படும் ஊதுகின்ற அமைப்பை காவிரி, கொள்ளிடக் கரைகளில் வளரும் நாணல் நறுக்கினைப் பதம் செய்து தயாரிப்பர். ஆரம்ப காலங்களில் நாதஸ்வரக் கலைஞர்கள் கல் நாயனம் கொண்டு கூடக் கலைத் தொண்டு புரிந்துள்ளனர். குடந்தை கும்பேச்வரர் கோயிலில் இன்றும் ஒரு கல் நாயனம் உள்ளது. வெண் கலம், தந்தத்தில் கூடச் செய்து பழைய வித்வான்கள் வாசித்துள்ளனர். தங்க நாயனம் வெள்ளி நாயனம் என்று அரசர்களும் பிரபுக்களும் கலைஞர்கட்குப் பரிசளித்தும் இருக்கிறார்கள்.

நாதஸ்வர வித்வான்களை இசை வேளாளர் என்று பண்புடன் அழைத்தல் மரபு. விவசாயி தரிசாகக் கிடக்கும் நிலத்தில் எள்ளையாவது விதைத்து வைப்பார். அதைப்போல் இசை வேளாளர் ஒவ்வொருவரும் தம் நெஞ்சைக் களனாகக் கொண்டு ஏதேனும் ஒரு கலையைப் பயின்று வைத்திருப்பார்கள். ஏழைக்கும் பாட்டின் இன்பமும் இறைவன் திருவருளும் ஒருங்கே கிடைக்கச் செய்பவர்கள் இவர்கள் ஆவார்கள். தங்களை மறந்து, உலகை மறந்து தாமே இசையாகித் தவமே கடமையாகி இசைத்தவம் செய்பவர்கள் இவர்கள் ஆவார்கள். ஒரு ராஜ யோகிக்குரிய அத்துணை லக்ஷணங்களும் கொண்டு மூச்சை உள்ளே இழுத்து பிராணாயாமம் போல் இசையாக வெளிவிடும் தன்மை மிக்க இசை வேளாளர்கள் எங்கு நின்று வாசிக்கச் சொன்ன போதும் தோளிலே சங்கீதத்தையே சுமந்து கொண்டு ஓடி நடந்து ஊதுகின்ற உயர்குடிப் பெருமக்களாவர். இசை வயலில் பெய்த அருள்மாரி இவர்கள் சங்கீதமாகும்.

லயத்திலிருந்து ஒரே மாதிரியான ஓசையை எழுப்புவதன் மூலம் உள்ளத்தை தெய்வீகத்தில் ஈர்ப்பது சிறந்த வழி. நாதஸ்வரம் ஒன்றில் மட்டும் தான் முதலில் ஒத்து, அடுத்தது தாளம், அதற்கடுத்தது தவுல். அதற்கு பிறகு நாதஸ்வரம் என்ற முறை வழங்கி வருகிறது. தெய்வ ஸன்னிதானத்தில் தெய்வீக ஸான்னித்யத்தை ஏற்படுத்த சில தாள வழி முறைகளைப் பெரியவர்கள் வகுத்துள்ளனர். முதலில் தவுலில் குமுறிய பின்னர்தான் நாதஸ்வரக் குழல் சேரும். அவ்வளவு பெரிய லய முழக்கத்தில் மக்களின் மனம் தெய்வீகத்தில் ஒருமைப்பட்டிருக்கும்போது நாதஸ்வரமும் ஒன்று சேரும்.

தமிழ்நாட்டின் புராதன நாதஸ்வர பரம்பரையினராகத் திருவீழிமிழலை, செம்பொன்னார்கோயில், இரனூர், திருப்பரம்புரம், மதுரை, திருச்சேறைக் குடியினர் கருதப்படுகின்றனர். இன்றும் உயிரோடிருப்பவர்களில் பத்மஸ்ரீ விருது பெற்ற திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளையும், திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளையும் குறிப்பிடத்தக்கவராவர். அருந்தொண்டாற்றி மறைந்த அமரர் திருவாவடுதுறை ராஜரத்னம், அமரர் குளிக்கரை பிச்சையப்பா போன்றோரும் நாதஸ்வர வாசிப்பில் பல புதுமைகளைப் புகுத்தியோராவர். நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், ஷேக் சின்ன மௌலானா போன்றோர் கடல்கடந்தும் புகழ் பெற்று வருகின்றனர். பழனி சகோதரிகள் தனலக்ஷ்மி - தெய்வகுஞ்சரம் போன்ற பெண்களும் நாதஸ்வரம் வாசித்து வருகின்றனர். இவ்விதம் நாதஸ்வரக் கலை எங்கும் பல்கிப் பெருகிவருகின்றது.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**திவ்விய தேசம் என எதை அழைப்பார்கள்?**

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திருமால் திருப்பதிகளைத் திவ்விய தேசங்கள் என்றும், உகந்தருளின நிலங்கள் எனவும் அழைப்பார்கள். பெருமாள் எழுந்தருளியுள்ள தலங்களில் திவ்விய தேசத்திற்கே ஏற்றம் அதிகம்.

**மங்களாசாஸனம் என்றால் என்ன?**

எம்பெருமானிடம் சென்று, நம் நலனை கோராமல் அவருக்கே பல்லாண்டு பாடுதலாகும். (அளவற்ற அன்பினால் ஏற்படும் இத்தகைய பரிவுக்குக் குற்றமில்லை).

குறிப்பு : "ஞானதசையிலே ரக்ஷ்ய ரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும். ப்ரேம தசையில் தட்டுமாறிக் கிடக்கும்'' என்பது பெரியோர் வாக்கு. இப்பண்பினால் ஆழ்வார்களில் ஸ்ரீ விஷ்ணு சித்தருக்கும் பெரியாழ்வார் எனப் பெயர் ஏற்பட்டது.

**திருப்பதிகள் எவ்வளவு வகைப்படும்?**

புராணப் புகழ்பெற்ற பௌராணிகம். தானே தோன்றிய சுவயம்வியக்தம். ரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஆர்ஷம், திவ்விய தேசம், ஆசாரியர்கள் உகந்தருளின க்ஷேத்திரம், அபிமானத்தலம் என்பன.

**புண்ணியத் தலங்களின் சிறப்பு என்ன?**

தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூவகை சிறப்புகளுடன் இருத்தல். ஆழ்வார்களின் அமுதமயமான ஈரச் சொற்பட்டிருத்தல்.

**திவ்விய தேசங்கள் எவ்வளவு?**

108 திவ்விய தேசங்கள்.

திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், சாளக்கிராமம், நைமிசாரணியம், வானமாமலை, புஷ்கரம், பதரி என 8 சுவயம் வியக்தத் தலங்கள். (மற்றும் சிலவும் உண்டு).

**பிரிவுகள் என்ன?**

40 தலங்கள் கொண்ட சோழநாட்டுத் திருப்பதிகள் 18 தலங்கள் கொண்ட பாண்டி நாட்டுத் திருப்பதிகள். 13 தலங்கள் கொண்டு மலைநாட்டுத் திருப்பதிகள். 2 தலங்கள் கொண்ட நடுநாட்டுத் திருப்பதிகள். 22 திருப்பதிகள் கொண்ட தொண்டை நாட்டுத் திருப்பதிகள். 12 திருப்பதிகள் கொண்ட வடநாட்டுத் திருப்பதிகள். 1 திருப்பதி கொண்ட திருநாடு ஆக 108 திவ்விய தேசங்கள். திவ்ய ஸூரிகள்–திவ்யப்பிரபந்தம்–திவ்விய தேசம் என்ற மூன்று திவ்வியங்களில் இந்த க்ஷேத்திரங்கள் அடங்கும்.

**ஆசாரியர்கள் உகந்தருளிய தலங்கள் யாவை?**

திருநாராயணபுரம் (மைசூர்), மன்னார்குடி, திருநாராயணபுரம் (திருச்சி), முதலியன. பெருமாள் கோயில் என்ற சின்னக் காஞ்சீரபுரம், இவைகளில் முன்னணியில் விளங்குவது. இப்பெருமாள் கோயிலுக்கு (ஸ்ரீவரதன் சன்னிதிக்கு) ஆழ்வார் மங்களாசாஸனமும் உண்டு என ஸ்ரீ காஞ்சி மகாவித்துவான் ஸ்ரீமத் உ. வே. அண்ணங்கராசாரியர் போன்ற பல பெரியோர்களின் திருவுள்ளமாகும்.

**மூன்று பெரும் தலங்கள் எவை?**

கோயில் என்ற திருவரங்கம், திருமலை என்ற வடவேங்கடம், பெருமாள் கோயில் என்ற சின்ன காஞ்சிபுரமாகும். (அவ்வகுப்பில் மைசூர் திருநாராயணபுரம். அழகர் கோயில், இவ்விரண்டையும் சேர்த்துச் சொல்வதும் உண்டு). தவிரவும் திருவரங்கத்தைப் போகமண்டபம் என்றும் திருவேங்கடத்தைப் புஷ்பமண்டபம் என்றும் காஞ்சீபுரத்தைத் தியாக மண்டபம் எனவும் அழைப்பார்கள். முதலில் கூறிய மூன்று திருப்பதிகளை — கோயில் — திருமலை — பெருமாள் கோயில் என, ஒரு சேர ஸ்ரீ வைணவர்கள் அழைப்பார்கள். திருவரங்கத்தில் திருவஷ்டாக்ஷரம், திருமலையில் சரம சுலோகம். ஸ்ரீ காஞ்சியில் துவயம் பரிமளிக்கும்.

**பாடல்கொண்ட தலப்பிரிவுகள் என்ன?**

1. திருவரங்கம் —11 பேர் பாடிய தலம்
2. திருப்பதி—திருப்பாற் கடலும்—தொண்டரப்பொடியாழ்வார் தவிர 10 பேர் பாடிய தலம்.
3. பரமபதம் —8 பேர் பாடிய தலம்
4. திருக்குடந்தை—7 பேர் பாடிய தலம்
5. திருமாவிருஞ் —6 பேர் பாடிய தலம் -சோலைமலை
6. ஆறு தலங்கள் —5 பேர் பாடியவை.
7. மூன்று தலங்கள் –4 பேர்கள் பாடியவை.
8. ஐந்து தலங்கள்—3 பேர் பாடியவை
9. இருபத்தி ஒன்று—2 பேர் பாடியவை தலங்கள்
10. அறுபத்தேழு —1 ஆழ்வாழ் பாடியது தலங்கள்



# செய்திச் சுருக்கம்



**திருமலையில்**
**ஆந்திர முதல்மைச்சர்**

திருமலை பிரம்மோற்சவத்தில் பங்கேற்கும் வகையில் 6-10-81 அன்று திருப்பதிக்கு ஆந்திர முதல்வர் திரு. டி. அஞ்சய்யா அவர்கள் வருகை புரிந்து, திருப்பதியிலும், திருமலையிலும் தி. தி. தேவஸ்தானத்தாரால் நடத்தப்பட்ட பல்வேறு பொது நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றார். 6-10-81 அன்று திருப்பதியில் உள்ள ஒரே சிவன் கோயிலான தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில்முன் அமைக்கப்பட்ட பெரிய நந்தி உருவத்தினை முதல்வரவர்கள் திறந்து வைத்தார். பின்னர் 'அலிபிரி டோல்கேட்' அருகில், 'ஓய்வு முகாமாக'ச் செயற்படும் வகையில் ரூ. 50 இலட்சம் செலவில் கட்டப்படவிருக்கும் கட்டிடத் தொகுப்பிற்கான அடிக்கல் ஒன்று நாட்டினார்.

பின்னர் திருமலையில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பத்மாவதி மகளிர்க கல்லூரி மாணவர்கள், ஆசிரியைகள் உதவியுடன் தி.தி.தே. தோட்டத் துறையினரால் சங்குமிட்டா காட்டேஜ் அருகில் நடத்தப்பட்ட மலர்க் கண் காட்சிக்குத் தன் சக அமைச்சர்கள் சிலருடன் முதல்வரவர்கள் வருகை புரிந்து, சிறப்பு மலர் கை வேலைப்பாடுகள் புரிந்த 22 பெண்களுக்குத் தங்க மெடல்கள் வழங்கினர். பிறகு தி. தி. தேவஸ்தானத்தாரால் பிரசுரிக்கப்பட்ட 'ஃப்ளவர் க்வீன்' எனும் ஆங்கில, மலர் சம்பந்தப்பட்ட நூல் ஒன்றினை வெளியிட்டார். 7-10-81 அன்று திருமலையில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் பங்கேற்ற முதல்வரவர்கள் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்களாக நியமிக்கப்பட்ட, திருவாளர்கள் டி. பசுபதி (வாய்ப்பாட்டு, திருப்பதி) ஏ. சத்திய நாராயண (வாய்ப்பாட்டு-விஜயவாடா), ஏ. விஸ்வநாத பாகவதர் (ஹரிகதை விஜயவாடா), பி. சூர்ய நாராயண திட்சதிலு (ஹரிகதை நரசாபூர்) ஆகியோர்களுக்கு பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். பின்னர் தி. தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட (சாது சுப்ரமண்ய சாஸ்திரி எழுதிய Lord Venkateswara, (ஆங்கிலம்) டாக்டர். ரமேஸன் எழுதிய Tirumala Temple (ஆங்கிலம்), சமுத்ரால லக்ஷ்மணய்யா எழுதிய இந்து தர்ம பரிச்சயமு (தெலுங்கு), எம். சங்கமேஸம் எழுதிய அன்னமாச்சார்யா ஸாகித்ய கௌமுதி (தெலுங்கு) முதலிய நான்கு நூல்களை வெளியிட்டார்.

பின்னர் தி. தி. தேவஸ்தானத்தாரின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா நடத்திய இரண்டாவது இதிகாச கல்வித் தேர்வில் வெற்றி பெற்று முதல் மூன்று இடங்களைப் பெற்ற மாணவியர் இருவர்க்கும், மாணவர் ஒருவர்க்கும் முதல்வரவர்கள் தங்க மெடல்கள் வழங்கினர்.

இறுதியாக திருமதி. எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களால் பாடப்பெற்ற ஸ்ரீ அன்னமாச்சார்யா கீர்த்தனைகளைக் கொண்ட 'பஞ்சரத்ன மாலா' எனும் ஐந்தாவது எல். பி. இசைத் தட்டினை திரு. அஞ்சய்யா அவர்கள் வெளியிட்டார். பின்னர் திருமதி. எம். எஸ். சுப்பு லட்சுமி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடை பெற்றதைத் தொடர்ந்து, விழா இனிது முடிவடைந்தது.

**ரூ. 50 இலட்சம்**

அண்மையில் முடிவுற்ற இந்த ஆண்டு திருமலை பிரம்மோற்சவத்தின்போது தி. தி. தேவஸ்தானத்தின் வருமானம் ரூ. 50 இலட்சமாகும். இதில் உண்டி மூலமாக கிடைத்தத் தொகை ரூ. 27 இலட்சமாகும். கடந்த ஆண்டு பிரம்மோற்சவ வருமானம் ரூ.32 இலட்சமாகும்.

**மகா சம்ப்ரோக்ஷணம்**

14-10-81 அன்று திருப்பதியிலுள்ள தி. தி. தேஸ்தானத்தாரின் ஸ்ரீ கோவிந்த ராஜ சுவாமி கோயிலின் அண்மையில் புதுப்பிக்கப்பட்ட படிகாவலி கோபுரத்திற்கான 'மகா சம்ப்ரோக்ஷண' விழா வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. படிகாவலியின் ஒன்பது கலசங்களிற்கு

தி: தி. தேவஸ்தான புத்தகங்களை முதல்வர் திரு. டி. அஞ்சய்யா அவர்கள் வெளியிடும்போது.



ரூ. 6.58 இலட்சம் செலவில் பொன் தகடு வேயப்பட்டது. இவ்விழாவின் போது திருவாளர்கள். பி. நாகி ரெட்டி (தலைவர் தி.தி.தே. மேலாண்மைக் குழு,) பி. எஸ். ராஜகோபால ராஜு (ஆணையர், அறநிலையத்துறை, ஆ.பி.) பி. வி. ஆர். கே. பிரஸாத் (செயலாட்சித் தலைவர், தி. தி. தே., கே. வீராரெட்டி (உறுப்பினர், தி. தி. தே. மேலாண்மைக் குழு) மற்றும் பலர் பங்கேற்றனர்.

மேற்படி கோயிலின் பங்காரு வாகிலிக்கும், திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் பங்காரு வாகிலிக்கும் பொன் தகடு வேய முறையே ரூ. 6.48 இலட்சம், ரூ. 2.97 இலட்சம் ஒதுக்கப்பட்டு, அதற்கான பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

**திருமண வசதிகள்**

உள்ளூர் மக்களின் வேண்டுகோளுக்கிணங்கி, நாராயணவனம் மற்றும் நாகலாபுரத்திலுள்ள தி. தி. தே. கோயில்களின் உள் உள்ள வெளி மண்டபங்களில் பொது மக்கள் திருமணம் நடத்திக்கொள்ள தி. தி. தே. அனுமதி வழங்கியுள்ளது. இக்கோயில்களுக்குள் சமையல் செய்து கொள்ளவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. திருமணம் செய்பவர்கள், அத்திருமணத்திற்காக ரூ. 50/-ஐ அக்கோயில் சம்பந்தப்பட்ட கோயில் அதிகாரிக்கு செலுத்துதல் வேண்டும். அப்பணத்திற்கு, தேவஸ்தானம் திருமணத்திற்கான சமையல் பாத்திரங்கள், மேளம், புரோஹிதர் போன்ற உதவிகள் வழங்கும். திருமணம் நடை பெற்றதற்கான திருமண சான்றிதழ்கள் அவ்வக்கோயில் அதிகாரிகளிடமிருந்து, கிராம முன்சீப், அல்லது ரெவின்யூ அதிகாரிகளிடமிருந்து, நடைபெறும் திருமணம் சம்பந்தப்பட்ட தகுந்த சான்றிதழ் பெற்றுத் தரின், வழங்கப்படும். இவ் அனுமதி 1-11-81 முதற்கொண்டு அமுலாக்கப்படும்.

**சிவானந்த ஜயந்தி**

'இமய ஜோதி' ஸ்ரீசுவாமி சிவானந்தரின் 95-வது ஜயந்தி விழா 1-9-81 13-9-81 வரை மதுரையில் மதுரை தெய்வ நெறிக் கழகத்தினரால் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மதுரை தெய்வ நெறிக் கழகத்தின் 43-வது ஆண்டு விழா மற்றும் சிவானந்த தபோவனத்தின் 14-வது ஆண்டு விழாவுடன் இணைந்த ஒரு 'முப்பெரும்' விழாவாக ஜெயந்தி விழா கொண்டாடப்பட்டது. இந் நாட்களின்போது சமய இலக்கியம் சம்பந்தப்பட்ட பல்வேறு தலைப்புகளில், திருவாளர்கள் மதுரை மாநகராட்சி மேயர் எஸ். கே. பாலகிருஷ்ணன், டாக்டர். சுந்தரமூர்த்தி, பேராசிரியர். க. வெள்ளை வாரணனார், பேராசிரியர் வஜ்ரவேல் முதலியார், சுப. அண்ணாமலை, சுந்தர சுவாமிகள், ஸ்ரீமதி சரோஜினி தேவி, சொ. சொ. மீ. சுந்தரம், டி. கே. நாராயணன், மற்றும் டாக்டர். ஏ. வெங்கோப ராவ் போன்ற அறிஞர் பெருமக்கள் பலர் சொற்பொழிவுகள் ஆற்றினர். ஒவ்வொரு நாளின் இறுதி நிகழ்ச்சிகளாக, பல்வேறு இசைக் கலைஞர்களின் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

தகவல்:
திரு. தி. கு. சுந்தரம்,
மதுரை.



அண்மையில் திருமலை பிரம்மோற்சவத்தின்போது கருட சேவை யன்று, ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு, ஸ்ரீ வல்லி புத்தூர் ஸ்ரீ ஆண்டாள் கோயிலிலிருந்து மலர்க் கூடைகளும், பட்டுத்துணிகளும் கோயில் மரியாதைகளுடன் பெற்றுக்கொண்டபோது.

**ஆர்ஜித சேவைகள்**

| | | |
|---|---|---|
| ஏகாந்த சேவை | ரூ. 50/- | நபர் |
| அர்ச்சனை | ரூ. 100/- | ஒரு |
| தோமால சேவை | ரூ. 50/- | வர்க்கு |

**புஷ்ப யாகம்**

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி அரங்கினுள் வருடாந்திர புஷ்பயாக விழா 5-11-81 அன்று நடை பெற உள்ளது. அங்குரார்ப்பணம் 4-11-81 அன்று நடைபெறும். இவ்விழாவில் பங்கேற்க விரும்பும் கிருஹஸ்தர்கள் ஒரு வங்கி டி. டி. மூலம் ரூ. 5000/- செலுத்துவர். கிருஹஸ்தரைச் சார்ந்த ஆறு நபர்கள் இவ்விழாவைக் கண்டு களிக்கலாம். 5 கிராம் எடையுள்ள தங்க டாலர், ஒரு வஸ்தர பஹுமானம், ரவிக்கைத் துண்டு ஒன்று ஆகியன கிருஹஸ்தருக்கு பஹுமானமாகக்கொடுக்கப்பட்டு கௌரவிக்கப்படுவர். ஆர்ஜித சேவையாகக் கருதப்படும் இவ்விழா நாளன்று, கோயிலில் கல்யாணோற்சவம், பிரம்மோற்சவம், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவை, திருப்பாவாடை, வசந்தோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. ★

# ராசி பலன்

(1-11-81 முதல் 30-11-81 வரை)

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

குறிப்பு : நல்ல நாட்கள் எனின், அதுபோது ஒருவருக்கு பணவரவு அல்லது குறைந்த பட்சம் மனமகிழ்ச்சியுடனுவது விளங்கு வர். மேலும் அதுபோது பிரயாணம் மேற்கொள்ளவோ அல்லது புதிய திட்டங்களை மேற்கொள்ளவோ ஒருவருக்கு நேரிடும்.

## மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

தன் பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாகக் கவலைகளுக்குள்ளாதல். 16-ம் தேதி வரை அவ்வப்போது பிரயாணம் மேற்கொளல். அதனுல் மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது தன் உடல்நலம் கெடல். எப்போதாவது கருத்து வேறுபாடுகள். 4-ம் தேதிக்கு முன்னர் முயற்சிகள் வெற்றியடைதல். மொத்தத்தில் இம்மாதம் மகிழ்ச்சி,பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், சத்காரியங்களில் பங்கேற்றல் ஆகியன கொண்டு விளங்கும்.

நல்ல நாட்கள்

அஸ்வினி : 4-ம் தேதி பிற்பகல், 5-ம் தேதி முற்பகல், 7,22,24,

பரணி : 5,11,12,16,21,23,25,

கிருத்திகை 1 பாதம் : 4-ம் தேதி பிற்பகல், 5-ம் தேதி முற்பகல், 7, 11,15,22,24.

## விருஷபம்

(கிருத்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சிரிஷம் 2-ம் பாதம் முடிய)

பணவரவு, வெற்றிகள், கேளிக்கைகளில் ஈடுபடல். எனினும், தன் பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகச் சிறிது கவலைக்குள்ளாதல், வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுற நேரிடலாம். தவருன நட்புறவினை தவிர்த்தல் நலம் பயக்கும். 16-ம் தேதிக்குப் பின்னர் அவ்வப்போது பிரயாணம்.

நல்ல நாட்கள்

கிருத்திகை 2,3,4 பாதங்கள் : 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 13,17,24,26.

ரோகிணி : 5-ம் தேதி பிற்பகல், 6-ம் தேதி முற்பகல், 9-ம் தேதி பிற்பகல், 14,16,25

மிருகசிர்ஷம் : 1,2 பாதங்கள்: 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம்தேதி முற்பகல், 17,24,26.

## மிதுனம்

(மிருக சிரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

பிள்ளைகள் மூலமாக அல்லது தவருன வழியில் பணவரவு, பிள்ளைகள் கள் அல்லது மனைவியுடன் கருத்து வேறுபாடுகள் அல்லது பெண்கள் மூலம் துன்பத்திற்குள்ளாதல். 16-ம் தேதிக்கு முன்னர் பிரிவு அல்லது நட்பு முறிதல். மொத்தத்தில் எந்த விதமான குறிப்பிடத் தக்க நிகழ்ச்சிகள் ஏதுமின்றி இம்மாதம் அமையும்.

நல்ல நாட்கள்

மிருகசிர்ஷம் : 3,4 பாதங்கள் 1, 8-ம் தேதி முற்பகல், 10-ம் தேதி பிற்பகல் 15,21,26,28,29-ம் தேதி முற்பகல்

திருவாதிரை : 2, 9-ம் தேதி பிற்பகல், 16,25

புனர்பூசம் : 1,2,3 பாதங்கள் : 1, 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 10-ம்தேதி பிற்பகல், 15. 19-ம், தேதி பிற்பகல் 26,28, 29-ம் தேதி முற்பகல்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

குடும்பத்தில் மகிழ்ச்சி எனினும் சிறிது உடல்நலம் கெடல், உறவினர்களால் சிறிது கவலைக்குள்ளாதல். புதிய ஆடை ஆபரணங்கள் வீட்டில் திருடு போதல். தீய எண்ணங்கொண்டோர் இடையூறு விளைவிக்க முயற்சித்தல். எனினும் தன்னம்பிக்கையுடன் செயற்புரிதலால் வெற்றி நிச்சயம். அவ்வப்போது பிரயாணம்

நல்ல நாட்கள்

புனர்பூசம் 4-ம் பாதம்: 1,3-ம் தேதி பிற்பகல், 5,6-ம் தேதி முற்பகல், 10-ம் தேதி பிற்பகல், 14-ம் தேதி பிற்பகல், 17,28-ம் தேதி பிற்பகல் 29-ம் தேதி முற்பகல்,

பூசம் : 4-ம் தேதி பிற்பகல், 5-ம் தேதி முற்பகல், 13,22

ஆயில்யம் : 1,3,10-ம் தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல், 17,26, 28-ம் தேதி பிற்பகல்.

## ஸிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

நல்ல நட்புறவுகள், விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதலுக்குள்ளாதல். நண்பர்கள் கூறும் தவருன அறிவுரைகளைப்பற்றி எச்சரிக்கையாக இருத்தல் நலம். 16-ம் தேதிக்கு முன்னர் நாட்கள் நன்ருக அமையும். பின்னர் சிறிது உடல் கெடல். தேவையற்ற செலவினங்கள் ஏற்படலாம்.

நல்ல நாட்கள்

மகம் : 4-ம் தேதி பிற்பகல் 5-ம் தேதி முற்பகல், 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 13,20, 24,26,30.

பூரம் : 2-ம் தேதி பிற்பகல், 4-ம் தேதி முற்பகல், 5-ம் தேதி பிற்பகல் 6-ம் தேதி முற்பகல், 14, 16, 25.

உத்திரம் 1 பாதம்: 4-ம் தேதி பிற்பகல், 5-ம் தேதி முற்பகல், 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல் 13,24

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பணவரவு, புதிய நட்புறவுகள் 16-ம் தேதிக்குப் பிறகு நாட்கள்

நன்றாக அமையும், எனினும் பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு. பிரயாணமும், உடற் சோர்வும் ஏற்படல். தவறான ஆசோசனைகளைப் பற்றியும் அதனாற்றான் வரும் கருத்து வேறுபாடுகளைப்பற்றியும்எச்சரிக்கை அவசியம்.

நல்ல நாட்கள்

உத்திரம் : 2,3,4 பாதங்கள் : 5ம் தேதி பிற்பகல், 6,8 ம் தேதி பிற்பகல் 9-ம் தேதி முற்பகல், 15,17,22,26.

அஸ்தம் : 9-ம் தேதி பிற்பகல், 10-ம் தேதி முற்பகல், 16,21,23-ம் தேதி பிற்பகல்.

சித்திரை : 1,2 பாதங்கள் : 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம் முற்பகல் 15,17,22,26.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

இம்மாதம் முழுவதும் மனயமைதியின்றி விளங்குவர். அதிக செலவினங்கள் அல்லது பண நஷ்டம், அவ்வப்போது பிரயாணமும் உடற்சோர்வும். வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுறல், எனினும் புதிய ஆடை ஆபரணங்கள். மதிப்புயர்தல் மற்றும் முயற்சிகளில் வெற்றி.

நல்ல நாட்கள்

சித்திரை : 3,4 பாதங்கள்: 1,8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல் 10-ம் தேதி பிற்பகல், 17,19,24, 28-ம் தேதி பிற்பகல், 29-ம் தேதி முற்பகல்.

ஸ்வாதி : 9-ம் பிற்பகல், 10-ம் தேதி முற்பகல், 16-ம் தேதி பிற்பகல், 20,25

விசாகம் : 1,2,3, பாதங்கள் 1, 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 10-ம் தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல், 12-ம் தேதி முற்பகல், 17,24,

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

பணவரவு, முயற்சிகள் வெற்றி, புதிய நட்புறவுகள், கேளிக்கைகளில் ஈடுபடினும் தீயநடவடிக்கைகளில் பங்கேற்றல். 16-ம் தேதிக்குப்பிறகு பிரயாணம் அல்லது வயிற்று வலியினால் அவதியுற நேரிடல். மொத்தத்தில் இம்மாதம் சுமுகமாகவே விளங்கும்.

நல்ல நாட்கள்

விசாகம் 4-ம் பாதம்: 5-ம் தேதி பிற்பகல், 10,11-ம் தேதி முற்பகல், 12,21,23,24,26.

அனுஷம்: 5-ம் தேதி பிற்பகல், 9, 10, 11-ம் தேதி முற்பகல், 13, 20, 22, 24.

கேட்டை : 1,3-ம் தேதி பிற்பகல், 5,10,12,21,26.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

கேளிக்கைகளில் ஈடுபடல், பணவரவு, புதிய நண்பர்கள். 16-ம் தேதிக்கு முன்னர் நாட்கள் நன்றாக அமைதல், மதிப்புயர்தல்.

நல்ல நாட்கள்

மூலம் : 2, 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 13,22,24.

பூராடம் : 1,5-ம்தேதி பிற்பகல், 6-ம் தேதி முற்பகல், 14,16, 21.23,25

உத்திராடம்: 1 பாதம்: 1, 6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 13,15,22,24,28-ம் தேதி பிற்பகல், 29-ம் தேதி முற்பகல்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல், கருத்து வேறுபாடுகள். தேவையற்ற செலவினங்கள். 16-ம் தேதிக்குப் பின்னர் நாட்கள் நன்றாக விளங்கல். அப்போது பணவரவு, வெற்றி உடம்பில் காயம் ஏற்படல். புதிய ஆடை ஆபரணங்கள்.

நல்ல நாட்கள்

உத்திராடம் : 2,3,4 பாதங்கள் : 4-ம் தேதி பிற்பகல். 5-ம் தேதி முற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 9-ம் தேதி முற்பகல், 15, 17,24,28-ம் தேதி பிற்பகல், 29-ம் தேதி முற்பகல்.

திருவோணம்: 5-ம் தேதி பிற்பகல் 6-ம் தேதி முற்பகல், 9-ம் தேதி பிற்பகல், 10-ம் தேதி முற்பகல், 14-ம் தேதி பிற்பகல், 16,23-ம் தேதி பிற்பகல், 25.

அவிட்டம் 1, 2 பாதங்கள் : 5-ம் தேதி பிற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல், 15,17, 24,26.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

பணவரவு, நல்ல நட்புறவுகள், கருத்து வேறுபாடுகள் அல்லது, கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுறல். உற்றார் உறவினருடன் பிரிவு 16-ம் தேதிக்குப்பிறகு நாட்கள் நன்றாக இருத்தல்.

நல்ல நாட்கள்

அவிட்டம் 3,4 பாதங்கள் : 1,6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல் 10-ம் தேதி பிற்பகல், 11-ம் தேதி முற்பகல், 17,21,26.

சதையம் : 2,7-ம் தேதி பிற்பகல் 8-ம் தேதி முற்பகல், 13,16,20,30.

பூரட்டாதி 1,2,3 பாதங்கள்: 1,6-ம் தேதி பிற்பகல், 7-ம் தேதி முற்பகல், 10-ம் தேதி பிற்பகல், 11ம் தேதி முற்பகல், 17,19,26,29.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

அவ்வப்போது பிரயாணம், கருத்து வேறுபாடுகள். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் சிறிது கெடல், அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை. பின் பகுதியின் போது இடையூறுகள் ஏற்படல். இறுதியில் பணவரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள்.

நல்ல நாட்கள்

புரட்டாதி 4-ம் பாதம்: 5 ம் தேதி பிற்பகல், 6-ம் தேதி முற்பகல், 8-ம் தேதி பிற்பகல், 9-ம் தேதி முற்பகல் 14,21,23,28-ம் தேதி முற்பகல், 29-ம் தேதி முற்பகல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | | ஸேவைகள் | | |
|---|---|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ: | 3000/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. | 400/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. | 750/- | பூராபிஷேகம் | ரூ. | 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. | 2000/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. | 3500/- |
| ஊஞ்சல் சேவை | ரூ. | 1500/- | *திருப்பாவாடை | ரூ. | 6000/- |
| தெப்போத்ஸவம் | ரூ. | 2500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ: | 3000/- |
| | | | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. | 2000/- |
| | | | பவித்ரோற்சவம் | ரூ: | 2500/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. | 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. | 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. | 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. | 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. | 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. | 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D: ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

*இச்சேவை செய்பவர்களுக்கு 5 கிராம் எடையுள்ள தங்க டாலர் ஒன்று வழங்கப்படும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதனை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக்கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதனையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதனையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும்; செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

ஸ்ரீ வேங்கடேச்வர பரப்ரஹ்மணே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயல்படு — ஸ்ரீ குருஜி கோல்வால்கர்

- உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

- தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஏதாவது ஒன்று அல்லது

ஒருசிலவற்றையாவது ஜெபித்திடு

ஓம் ஸ்ரீ வேங்கடேசாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாய

ஓம் நமோ நாராயணாய

நமசிவாய

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே

ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரேஹரே

- தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேச்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்

- வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

- உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

- தினந்தோறும பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாரயணஞ் செய்.

- சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக கொள்

---

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

---

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி